First Thousand.

VOL. XV]. JUNE, 1906. REGISTERED.—M. 108 [No. 2.

லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அண.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவிலை விவரம்.
ஒருவருஷத்துக்கு ரு. 4
6 மாதத்துக்கு ,, 2-2




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

DEVOTED TO TRUTH AND KNOWLEDGE:

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா ரென்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.

A HIGH THOUGHT REVIEW
TAMIL MONTHLY
Estd. May 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்கவதற்குத்தக.—திருக்குறள்.

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS, ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS

Hitch your wagon to a star—Emerson.

CONTENTS.



அடக்கம்



"Our Theism is the Purification of the Human Mind"—Emerson.

Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription, Rs. 5;

The Secretary, Diffusion of Knowledge Agency, 2, Sydogy Lane, PYCROFT'S ROAD:
*Anandashrama, Triplicane, Madras.*

**For Satyananda of the Ananda Mission.**

Thin Paper Edition for the People.] *Copy-right.* [Subscription Price: Yearly Rs. 4.

*"Like a spider, like the earth, and like a living creature. He produces the Universe."—Upanishad.*

# MADRAS RAILWAY COMPANY.

TONGA SERVICE BETWEEN COONOOR AND OOTACAMUND.

For the convenience of the public the Madras Railway have arranged to issue on behalf of the Proprietors of the Nilgiri Horse Tonga and Bullock Transit Company. Tonga tickets between Coonoor and Ootacamund at the following rates :—

| Stations. | Special Tonga of 3 seats. | For one seat in a Tonga. |
|---|---|---|
| Coonoor to Ootacamund... | 13 8 0 | 5 8 0 |
| Ootacamund to Coonoor... | 12 8 0 | 5 0 0 |

These tickets will be issud upon the conditions given in the Company's current Coaching Guide pages 119 and 120.

The Railway Company accepts no responsibility for delay, injury or loss to passengers or their baggage.

---

கூனூர் உதகமண்டலம் டாங்கா சவாரி.

பொதுஜன சௌகரியத்தை உத்தேசித்து சென்னை ரயில்வே கம்பெனியார் "நீலகிரி குதிரை, மாட்டுத் தபால்வண்டி கம்பெனி"யின் சொந்தக்காரர்களுக்காக, கூனூருக்கும் உதகமண்டலத்துக்கும் டங்கா டிக்கெட்டு விற்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். மேலே கண்டிருக்கிறபடி சார்ஜ் செய்யப்படும்.

ஷை கம்பெனியாருடைய "கோசிங்கைட்" புஸ்தகம் 119, 120-வது பக்கத்தில் கண்ட நிபந்தனைகளை யொட்டி டிக்கெட்டு விற்கப்படும். ரயில்வே கம்பெனியார் இதனால் பிரயாணிகளுக்காவது அவர்களுடைய சாமானுக்காவது நேரிடும் எவ்வித கஷ்ட நஷ்டத்துக்கும் பாத்தியப்பட்டவர்களாகார்கள்.

---

Madras Railway Company,

Agent & Manager's Office,

Royapuram Terminus,

Madras, 6th June, 1906.

# WANTED HELPERS and AGENTS

THROUGHOUT THE MADRAS PRESIDENCY, BURMA AND CEYLON,

## FOR CANVASSING SUBSCRIBERS TO, AND FORMING READING CIRCLES OF

# THE VIVEKA CHINTAMANI

**The oldest and the best Tamil Monthly**

**Illustrating the Principles of Education, Psychology, Soul-Culture and Ethics.**

**Adapted for use in Homes & Schools.**

**Annual Subscription Rs. 4.**
**Thick paper Edition Rs 5** } **Payable in advance.**

*Orders unaccompanied by Remittance will be executed by V. P. P. for a year's Subscription.*

Subscription registered by Volume only.

*And cannot be discontinued in the middle of a Volume.*

Large discount to wholesale purchasers of 100 and 50 copies at a time for sale or distribution.

Apply to the Secretary,

**D. K. Agency,**

**Triplicane, MADRAS**

---

*Rs. 3 cloth, gilt. V. P. Rs. 3-4.*

# RAJAM AIYAR'S RAMBLES IN THE VEDANTA.

It may be mentioned that the author of this monumental work "was no administrator who sunk his soul in state-craft, no lawyer who loved and lived for money, no pedant whose glory was to preach, no fame-hunting patriot, no title-thirsting millionaire, no reformer of the world, no bairagi with a beard, no swami who offered salvation to souls—no, he was none of these. He was a simple, sincere seeker after Truth, a humble individual ... who, after passing through a brilliant course of English education, turned to poetry and philosophy and yearned to realise the truth of Existence: a restless soul that thirsted for the knowledge of the Infinite and found the highest peace and bliss in devotion and meditation, in the study of the Upanishads and the Gita, in rambles and recreations in the Vedanta.. and in that sweet communion with the A'tman, latterly vouchsafed to him, which made him truly realise that this life is but a preparation for a higher one." Truly, *the world knows nothing of its greatest men.* We sincerely trust that this work will be welcomed by men of all persuasions and creeds, by the Hindu and the Christian, the Vedantin and the Materialist, by every seeker after Truth and every serious thinker, even by the mere lover of literature, for. indeed, the style is sweet and chaste and fascinating The price has been fixed very low so as to place the work within the reach of everybody.

Apply to Messrs Goodwin & Co.,

San Thome, Madras.

உ

"*Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.*"

*Seek Truth wherever you can find it. But, "Make your choice and stick to it till you reach the End.*

ஸத்யம்வத.—**Speak the Truth.**

"Hitch your Wagon to a Star." "To Thine Own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ [God is Love : Knowledge is Power: *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**


புத்தகம் 15.] 1906-ம்வருஷ ஜூன்மீ. [சஞ்சிகை 2.


# THE PRINCE OF WALES' PLEA FOR SYMPATHY.

"I realised the patience, the simplicity of life, loyal devotion and religious spirit of the Indian people, and cannot help thinking, from all I have seen and heard, that the task of governing India would be made easier if we infused therein a wider element of sympathy, and I venture to predict that there would be an overabundant and genuine response to such sympathy."—*H. R. H. the Prince of Wales at the Guildhall Banquet.*

## இளவரசர் இந்தியர்பால் அனுதாபம் வேண்டல்.

மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசரும் இளவரசியாரும் இந்தியாவுக்கு விஜயமாய் வந்து சுற்றுப்பிரயாணம் செய்து தங்கள் தேசத்துக்குத் திரும்பினதும், லண்டன் மாநகர சங்கத்தார் நகர மாளிகையில் அவர்களுக்கு நல்வரவு கூறியுபசரிக்க ஒருபெரிய விருந்தளித்தார்கள். அதற்கு இப்பொழுது மந்திரிகளாயிருப்பவர்களும் முன் மந்திரி ஸ்தானம் வகித்தவர்களும் மற்றுமுள்ள பிரதானஸ்தர்கள் எல்லாரும் வந்திருந்தார்கள். அச்சமயம் மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசர் அவர்கள் இந்தியாவைப்பற்றி அவர்களுக்கும் இளவரசியாருக்கும் மனதிற்பட்ட எண்ணங்களை யெடுத்துச்சொல்லிப் பேசினதில் ஒரு முக்கியமான அபிப்பிராயத்தை வெளியிட்டார். அது என்னவெனில் இந்தியாவைப்பார்த்ததிலிருந்து இந்தியர்களுடைய மேலான குணங்களை நேரிலறிந்துகொள்ளலானேனென்றும் அவர்கள் படாடோபமின்றி சுத்தஜீவனஞ்செய்து வருகிற ஸாதுக்களென்றும், அவர்களுடைய பக்தியும் ஆத்ம சிந்தையும் மெச்சத்தக்கதென்றும், அவர்களுடைய குணக்குறிகளை

நாங்கள் நன்காய்ந்து ஊன்றிப்பார்த்த அளவில், அவர்களை அரசாண்டுவரும் நாம் நமது அரசாட்சி முறையில் இப்பொழுதைவிட அதிக அனுதாபம்காட்டி வருவோமானால், அரசாட்சிவேலை நமக்கு இலகுவாவதன்றி நமது அனுதாபத்துக்குத்தக்கபடி அவர்கள் பன்மடங்கு அதிகமாய் நம்மிடத்தில் விசுவாஸம் பாராட்டுவார்கள் என்பதற்குச் சந்தேகமில்லையென்றும், இந்த விஷயத்தைமட்டும் தன் உள்ளத்திற்பட்டபடி வற்புறுத்திக் கூறுமலிருக்கக்கூடவில்லையென்றும் சொன்னர்.

ஆங்கிலேயர் ஆட்சி பொதுவில் மேலதாகவேயிருந்தாலும், அவர்களுடைய மேலான கொள்கைகளை யனுஷ்டித்து நிரைத்தன காரியங்களை நடத்தவேண்டிய உத்தியோகஸ்தர்கள் பெரும்பாலும் அனுதாபக்குறைவால் அக்கொள்கைகளுக்கு நேர்மாருக நடந்துகொள்ள நேரிடுகிறது. தென்பது இத்தேசவாசிகளுக்குப் பிரத்தியக்ஷானுபவமாம். இப்படி நேரிடுங்கால், ஜனங்கள் மிகவும் சுரணையுள்ளவர்களும் கூர்புத்தியுள்ளவர்களுமா யிருப்பதோடு, தங்கள் மனதிற்பட்டதை படாடோபம்செய்து வற்புறுத்திக்காட்டும் சுபாவமின்றி, பொறுமையாக வகித்துக்கொண்டு போகிறவர்களாகவிருப்பதால், அவர்களுடைய உள்ளெண்ணத்தை யுள்ளபடி யுணரத்தவறி, இத்தேசத்திலுள்ள ஆங்கிலேய உத்தியோகஸ்தர்கள் சில சமயங்களில் தாறுமாருக நடந்துகொள்கிருர்கள். இதற்கு ஒருபிரபல உதாரணம் வேண்டில் வங்காளத்திலிருந்து புதிதாய்ப் பிரிக்கப்பட்ட கீழ்வங்கநாட்டில், உதவிக்கவனர் முதற்கொண்டு, போலீஸ் சூப்பிரின்டெண்டெண்டு ஈருக, எல்லாரும் ஜனங்களுடைய நோக்கமறிந்து அவர்களுடைய சுபாவத்துக்குத் தக்கபடி நடந்துகொள்ளாமல், ஏதோ மனக்கோட்டை கட்டிக்கொண்டு, பித்துப்பிடித்தவர்கள்போல் நடந்துகொள்வது ஒன்றேபோதும். மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசர் மூன்றுமாசமே இத்தேசத்தில் சுற்றுப்பிரயாணம் செய்தாராயினும், அவருடைய அடக்கமும், அமர்வும், நுட்பபுத்தியும், மனிதர்கள் குணத்தைக் கிரகித்துக்கொள்ளும் நுட்பசக்தியும் விசேஷமாக விளங்கியது. அப்படியே இளவரசியாரும், எங்குசென்றாலும் ஜனங்களுடைய ஹிருதயத்தைக் கவர்ந்துகொள்ளும்படி நடந்துகொண்டார்கள். இது அவர்களிடத்திருந்த உண்மையான இராஜகுணமாம் அனுதாப சிந்தையினுல் மிகவும் மேலாகவிளங்கியது. அனுதாபம் முதிர்ந்தால் அதுவே கருணை. கருணையின் முதிர்வே அன்பு. அன்பே தெய்வம். ஆகையால் அரசர்கள் தெய்வத்தன்மை வாய்ந்தவர்களென்பதற்கு அருத்தம் என்னவென்றால் அன்பின் வாசனையாகிய அனுதாபசிந்தையும் அனுதாப முதிர்ச்சியாகிய கருணையும் அவர்களிடத்தில் இயல்பாகவமர்ந்திருப்பதால் அவர்கள் இந்த திவ்ய கல்யாண குணமகிமையின் விசேஷத்தால் "தெய்வத்தன்மை"=தெய்வத்தின்குணம், வாய்ந்தவர்களாயிருக்கிருர்களென்பதேயன்றி; காட்டேறி, கருப்பண்ணன்முதலியகுட்டிதேவதைகளைப்போல் குடிகளிடத்தில் இறைவாங்குவதில் கடுமையும் கொடுமையும் வாய்ந்தவர்களாயிருக்குந்தன்மையால் "தெய்வத்தன்மை" என்பதல்ல. அப்படிப்பட்ட அரசர்களும் இருந்திருக்கிருர்கள், இன்னமுமிருக்கிருர்கள், இனியுமிருப்பார்கள். ஆனல் இவர்கள் அந்த துர்த்தேவதைகளைப்போல கொடுங்கோல் மன்னராவரேயன்றி, செங்கோல் மன்னராகார். மாக்ஷிமைதங்கிய எட்வர்ட் அரசர் தம்மரசியோடும் வாழி. அவர் செங்கோல் வாழி. அவர் சற்புத்திரரும் இளவரசருமாகிய வேல்ஸிளமன்னர் தம் தர்மபத்நியோடும் வாழி. பரதகண்டம் வாழி. தர்மசிந்தை வாழி.

ஓம் தத் ஸத்.

# PSYCHIC CURE—A TALE OF THE TIMES.

## ஆத்ம வைத்தியம்—ஒரு உண்மையான கதை.

(*By Sri Balasundarum.*)

II.

“ முத்திக்குவித்துமுதல்வன் தன்ஞானமே
பத்திக்குவித்துப்பணிந்துற்றுப்பற்றலே
சித்திக்குவித்துச்சிவபரந்தானாதல்
சத்திக்குவித்துத்தனதுடைசாந்தமே.”—திருமந்திரம்.

குப்பாசாஸ்திரியும் சோதிமதி ஐயரும் குசலப்பிரச்னம்செய்து யோகக்ஷேமங்களை விசாரித்தானபின் குப்பாசாஸ்திரிகள் தான் திடீரென்று அவ்வளவுதூரம் அவரைத்தேடிக் கொண்டுவர நேரிட்ட அவசரத்தைப்பற்றிச் சொல்லத்தொடங்கி தாழ்ந்த குரலில் குசுகுசென்று வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தார். சோதிமதி ஐயர், சாஸ்திரிகள் சொன்னதையெல்லாம் ஏகாக்ர சித்தராயிருந்து கிரகித்துக்கொண்டு வந்து இடையிடையே இரண்டொரு மொழிபகர்ந்ததன்றியதிகமாகப் பேசவில்லை. இப்படி வெகுநேரம் சாஸ்திரிகள் இரகஸ்யம் பேசுகிற மாதிரியில் அவருக்குச் சொல்லவேண்டியதைச் சொல்லிவற்புறுத்துகிறதும், ஐயர் நகைமுகம்காட்டி விளையாட்டுச் சித்தராயிருந்து மறுமொழி பகர்கிறதுமாயிருந்துவரக், கடைசியில் சாஸ்திரிகள் ஐயருடைய இந்தத் திருவிளையாட்டை மாற்ற முடியாதவராய், அவரைக் கடிந்துசொள்ளக் கூடாமையால், தனக்குள் தன்னைத்தானே வெறுத்துக்கொண்டு, மனக்கிலேசம் பிடித்தவராய்,—

“ஐயரவாள்! நான் எவ்வளவோ ஊக்கமாகவும் உண்மையாகவும் நான் வந்த காரியத்தின் பிரமாதத் தன்மையைத் தங்கள் மனதிற்பட வற்புறுத்தப்பார்த்தும், அது பலிக்காமற் போனதைப்பற்றிச் சிந்திக்க மிகவும் வருத்தமுறுகிறேன்.”—என்று விசனக்குரலில் சொல்ல,—

ஐயர் :—அப்படியொன்றும் நீங்கள் சொன்னதை நான் கவனிக்காமலிருக்கவில்லையே! ஏனிப்படி வீணாக நிஷ்டூரப்பட்டு மனதைப் புண்படுத்திக்கொள்கிறீர்கள்! வேண்டாம்! அந்த நிஷ்டூரத்தை விட்டுப்பேசும்!

சாஸ்திரி :—நிஷ்டூரம் ஒன்றுமில்லை. என் முயற்சி பலிக்கவில்லையே யென்ற விசனம் மட்டும் மனதிற் பூராகவிருக்கிறது. அதைப் போக்க என்னாலில்லை. நீங்கள்தான் போக்கவேண்டும்!

ஐயர் :—இப்படித் தன்மனதைத்தான் நன்றாக வைத்துக் காப்பாற்றமாட்டாமல், ‘கொண்ட பெண்டைக் கூட்டிக்கொடுப்பவன்போல்’ தன் மனதை சுகப்படும்பொருட்டு ஜனங்கள் பிறரிடம் ஒப்புவிக்கத் தயாராயிருப்பதை நினைத்து நினைத்துத்தான் நான் வேடிக்கை பொறுக்கமாட்டாமல் இதுவும் ஈசன் திருவிளையாடல்களில் ஒன்று என்று மனதிற்பட்டதையுள்ளடக்காமல் அனுபவித்து உங்களோடு உரையாடிவந்தேன். அகத்திலுள்ளது புறத்தில் விளக்கினதால் அது உங்களுக்கு ‘விளையாட்டுப்போல்’ தோன்றியது. வேறு விசேஷம் ஒன்றுமில்லை. உண்மையாக நீங்கள் சொன்னதில் ஒருவார்த்தை யல்லது அக்ஷரம்கூட விடாமல் உங்கள் ஸ்வரங்கூட என் மனதிற் பதியவைத்துக் கொண்டிருக்கிறேன்.

சாஸ்திரி :—ஆனால் என்னைப் பைத்தியக் காரனாக்கிவிட்டீங்கள!

ஐயர் :—நான் அப்படியொன்றும் செய்யவில்லை! நீங்கள்தான் தலையில் பித்தேறச்செய்து கொள்கிறீர்கள்!

சாஸ்திரி :—எப்படி?

ஐயர் :—நீங்கள் சொன்னதையெல்லாம் திருமபிச் சொல்லிக்கொண்டு உமக்கு நீரே அந்நியமாயிருந்து பார்த்துக்கொள்ளும், தெரியும்.

சாஸ்திரி :—நீங்கள் சொல்வது எனக்கு ஏறவில்லை.

ஐயர் :—பித்தேறியிருந்தால் விஷயம் ஏறாதுதான்!

சாஸ்திரி :—அதையிறக்கும் வழிதான் சொல்லுங்களேன்!

ஐயர் :—அதீ தலைக்கேறின வழிதெரிந்தால், ஏறின வழியே அது இறங்கும்.

சாஸ்திரி:—ஏறின வழிதான் என்ன சொல்லுங்களேன்!

ஐயர்:—அதுதான் சொன்னேனே! உமக்கு நீரே அந்நியமாயிருந்து பார்த்துக்கொள்ளும் என்று!

சாஸ்திரி:—அதுதான் விளங்கவில்லை.

ஐயர்:—'அது' விளங்கிக்கொண்டேதானிருக்கிறது. உமக்குத்தான் பார்க்கக்கண் இல்லை.

சாஸ்திரி:—பைத்தியக்காரனானது போதாதென்று 'கபோதி'ப்பட்டமும் கிடைத்தது!

ஐயர்:—நான் ஒருபட்டமும் உமக்குக் கொடுக்கவில்லை. எல்லாம் நீராகச் சூட்டிக்கொள்வதுதான். சணப்பன் வீட்டுக்கோழி சும்மா இருக்குமா? இராது!

சாஸ்திரி:—அங்கே பட்ட அவஸ்தைகள் போதாதென்று, இங்கே வலுவில் வந்து இந்த வில்லங்கத்தில் மாட்டிக்கொண்டேனே, எனக்கு சணப்பன் வீட்டுக்கோழியின் உவமானம் நன்றாகப் பொருந்தும்! அந்த வார்த்தைசொன்னீர்களே, அது ரொம்பசரி! ஆனால் அப்படி தானாக மாட்டிக்கொண்ட விலங்குக்கு விடுதலையில்லையா?

ஐயர்:—விலங்கிட்டவரே விடுவிப்பவருமாவர். "தானே தனக்குப் பகையும் நட்டானும்" என்கிறார் திருமந்திரம் ஓதிய திருமூலதேவர்.

சாஸ்திரி:—சரி! வியவகாரத்தில் தொடங்கிய வார்த்தை நாமறியாமலே நம்மை வேதாந்தத்திற் கொணர்ந்துவிட்டு விட்டது! தங்களோடு வேதாந்த விசாரம்செய்ய நான் அருகனல்லவே! நான் சுத்தமூடன்; வயிற்றுப்பிழைப்புக்காக வைதிகவேஷம்போட்டுத் திரிகிறேன். அத்தியயனம் பண்ணியிருந்தும் கர்மகாண்டத்திலுள்ள மந்திரங்கள் மட்டும் நெட்டுருவேயன்றி, கர்மத்தின் ஸ்வபாவம் இன்னதென்று இன்னும் நானறியவில்லை. 'கர்மா, கர்மா'வென்று வாயினால் மட்டும் சொல்கிறேனேயொழிய அதற்குத் தலைகாலாவொன்றும் என் மனதில் அவகாசப்படவில்லை! "வைதிகனுக்குப் பூதஞ்சி வேண்டும்" என்கிற அபமையார் வசனத்தையனுசரித்து நான் வேஷம்போட்டு வயிறு வளர்க்கிறேன். இந்த வேஷம் எப்போதும் பலிப்பதில்லை. அந்த அம்மாள் லௌகிகர் மனைவியாகவிருந்தாலும், ஆத்ம ஞானமென்பது அம்மாளைப்போலவே ஐயரவாளுக்குமில்லாவிட்டாலும், அந்தம்மாளுடைய பக்தி (மூடபக்தியென்று நீங்கள் சொல்வீர்கள்! சொன்னாலும் பக்தி பக்தியே!) சிரத்தையுண்டே, அது மிகவும் ஆச்சரியகரமாயிருக்கிறது! நான் ஏதோ வைதிக வேஷத்திற்குள்ள தோரணையில் சில பரிகாரங்களைச் சொல்ல, அந்தம்மாள் அதையுண்மையாகவே நம்பிவிட்டார்கள். அந்த பக்தி சிரத்தையை நல்வழியில் செலுத்தி அவர்களுக்கு நன்மையுண்டாகும்படிச்செய்ய, உண்மையான ஆத்மவிவேகம் உதிக்காத எனக்கு வழிதெரியவில்லை. ஆகையால்தான் "கிணறு வெட்டப்போய் பூதம் புறப்பட்ட கதையாகவிருக்கிறதே!"வென்று பிரமித்து, இதற்கு வேண்டிய வழியை உண்மையாக உள்ளபடி தேடவேண்டுமென்று இங்கே வந்தேன்! அதுவும் முதலில் தங்கள் ஞாபகம் தோன்றினபோது, தாங்கள் சோதிடந் தெரிந்தவர்களாதலால், என் வைதீக வித்தையில் பலிக்காதது தங்கள் சோதிட வித்தையினால் பலிக்கலாமோவென்று நினைத்துவந்தேன். அந்த எண்ணமே என் மனதிற் குடிகொண்டிருந்தமையால், நீங்கள் நான் இவ்வளவு பேசியும் அந்த வழிக்கு வராமைபற்றி உள்ளுக்குள் மனஸ்தாபம் மிகுந்தது. ஆனாலும் நீங்கள் நான் பட்டணத்தில் பார்த்ததுபோலன்றி இப்பொழுது ஏதோ மாறியிருக்கிறதாகப்பட்டதாலும், காசு பணத்தின் ஆசையும் மோகமும் தங்களை ஆட்டிவைக்கச் சக்தியின்றிச் சிதறிவிழப் பார்த்தமையாலும், தங்களிடத்தில் என்னையறியாமல் எனக்குள் ஒருவித மதிப்பும் அச்சமுமுண்டாகத் தங்களை சாமான்யமாக நினைத்துப் பேசத்துணியாமல் எனக்குள் தன்னைத்தானே வெறுத்துக்கொள்ளலானேன். தங்கள் குரலிலும் பார்வையிலும் ஏதோ நான் இன்னதென்று பகுத்தறிந்து கிரகிக்கக்கூடாத ஒரு சூக்ஷ்ம சக்தி என் புத்திக்கு லக்ஷியப்படாமல் எப்படியோ இரகசியமாய் என் மனதிற் புகுந்து என்னை ஆட்டுவிக்கிறதாகத் தோன்றுகிறது! இது என்னவோ மாயம் புதிதாயிருக்கிறது! ஒருநாளும் நான் இப்படிப் பரவசப்பட்டதில்லை. மனதை சுகப்படும் பொருட்டுப் பிறரிடம்ஒப்புவிக்கத்தயாராகவிருக்கறவர்களைக் "கொண்ட பெண்டைக் கூட்டிக்கொடுப்பவனுக்கு"உவமேயமாகச்சொன்னீர்களே! இப்

படி நேர் நேராகவிருந்த பேசிக்கொண்டு வாயில் வார்த்தையிருக்கையிலேயே, இந்திரஜாலம் செய்பவனுட்டமாக, புத்தி சித்தம் முதலிய நாலு வாசலுங்கடந்து நடுவுள்ளே புகுந்து உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் உத்தம புருஷர்களை யாருக்கு ஒப்பிடுகிறது? ஸ்ரீ கோபாலகிர்ஷ்ணன் செய்த லீலைகளெல்லாம் ஏதோ கற்பிதமென்று நினைத்திருந்தேன். வெண்ணைதிருடிக் கண்ணன் செய்த திருட்டெல்லாம் இப்படித்தானிருக்குமென்று இப்பொழுதுதான் எனக்கு அனுபவரீதியாக விளங்கலாயிற்று! அன்றைக்குப் பட்டணத்தில் இங்கிலீஷ்படித்துஉண்மையுணர்ந்த உத்தமசித்தர் ஒருவர் வீட்டுக்குப் போயிருந்தேன். அப்பொழுது அவர் அவ்வளவுபெரியவராயிருந்தும் சிறு பெண்குழந்தைகளோடு கூடி ஏதோஒரு பாட்டுப் பாடிக்கொண்டிருந்தார். அதுகேட்க நன்றாயிருந்தது! அப்பொழுது அவரைச்சிஸமென்று நினைத்தேன். அதனுண்மை இப்பொழுதுதான் எனக்குச் சுருக்கென்று மனதிற்றைக்கலாயிற்று! அந்தப்பாட்டு ஞாபகத்துக்கு வரமாட்டேன் என்கிறதே!—பல்லவிமட்டும் இப்போது ஞாபகத்துக்கு வருகிறது!

"இந்த 'லூட்டி' செய்பலாமோ யசோதை
பாலா!"

ஐயரவாள்! இதென்ன! உண்மையாகவே பித்தம், தலைக்கேறிவிட்டாப் போலிருக்கிறதே! இதென்ன போதை! இதென்ன மயக்கம்! ஓஹோ! மாயக்கண்ணா! நீ யிருந்துபோய் எத்தனையோ காலமாய்விட்டதென்றல்லவோ இருந்தேன்! நீ இன்னுமிருக்கிறாயா இங்கேதானே! பக்தவத்ஸலா! ஹிருதயகமலவாஸா! . . . - என்று

சாஸ்திரிகள் பகவானைத் துதித்துக்கொண்டிருந்தபடியே மூர்ச்சித்து ஸ்தம்பமாய் அசைவற்றுக் காஷ்டமாக இருந்துவிட்டார்.

சோதிமதி ஐயரோவெனில் அவர் விழித்த கண் விழித்தபடியிருக்க சாம்பவிமுத்திரையப்பியசித்துத் தேர்ந்தவரானதால், பஹிர்முகத்தோற்றம் தோற்றமாத்திரமாக நிற்க, அவர் நாட்டமெல்லாம் அந்தர் முகமாகவேயிருந்தபடியால், யோகஸம்யமத்திலிருந்தபடி பூரணத்தில் புகுந்து பாவசமாதியிலிருந்தார். சோதிமதி ஐயர் அன்பு முதிர்ந்த கிருஷ்ணபக்தர் என்கிற இரகஸியம் நமக்குத் தெரியுமாதலால், ஐயரவாள் பாவசமாதியிலிருக்கவும், சாஸ்திரிகள் மனதைக் கிருஷ்ணன் வந்து திருடிக்கொண்டு போன சங்கதி நமக்கு அதிசயமாகத் தோன்றவில்லை ஆனால் இந்த யோக ரகஸியங்களில் புகுந்து பார்க்கும் திறம் எல்லாருக்கும் இல்லையே அதைப்பற்றி நாம் ஏன் சொல்லவேண்டுமென்றால், நாம் வீணில் அதைக் குறிக்கவில்லை. சாஸ்திரிகள் சாதாரணமாகப் பேசிக்கொண்டிருந்தவர், இப்படி உளறிக் கொட்டி 'உண்மையைச்சொல்லிவிட்டதன்றி, கடைசியில் தானும் மூர்ச்சித்துக் காஷ்டமாக நின்றுவிட்டாரே! இப்படி இருவர் கூடிப் பேசிக்கொண்டிருக்க, அவர்கள் சம்பாஷணையைக் குறிப்பிடுவோமென்று நடுவில் நின்று இறகுபிடித்தெழுதிக்கொண்டுவந்த நாம் பிடித்த பேனா பிடித்தபடி கையில் நிற்க, இருவரும் இப்படியிருந்தவிடந்தெரியாது மௌனத்தில் மூழ்கிக் கிடந்தால், அப்புறம் நமக்கு வேலையென்ன!

* * *

குப்பாசாஸ்திரிகள் 'சள சள' வென்று கூடாமலைச் சலம் முற்றத்தில் விழ்கின்றமாதிரி பேசிக்கொண்டிருந்தவர் திடீரென்று மௌனம் சாதித்து விறைத்த கட்டைபோல் நிமிர்ந்தபடி உட்கார்ந்துகொண்டிருப்பதைக் கண்டு ஓதுமதிநாதன் ஓடிவந்து தகப்பனார் விழித்திருப்பதைப் பார்த்து "அப்பா! அப்பா!" வென்று மிருதுவாக இரண்டு மூன்று தடவை கூப்பிட்டுப் பார்த்தான். அப்பா 'விரைப்பு விடாய்ப்பு முதலிய விசேஷக்குறியொன்றும் தோன்றாமல்' உட்கார்ந்திருந்தபோதிலும், அவருடைய இரகசியம் தெரிந்தவனாதலால், அவர் * வசமாதியிலிருக்கிறாரென்றும் சாஸ்திரிகள் பிடாரன்கைப்பட்டபாம்புபோல் ஆடிப்பாடியமர்ந்து, அசைந்தாடுவது நின்று அயர்ந்தாடு நிலையிலிருக்கிறார்போலிருக்கிறதென்றும் ஊகித்து, சரசரவென்று உள்ளேசென்று தன் தாயைக் கூப்பிட்டு, புறக்கடையில் யாரோ துணி தோய்க்கிற சப்தம் காதில் விழுந்தமையால் அதையுடனே நிறுத்தும்படி சொல்ல அவசரமாகக் கட்டளையிட்டு வீட்டில் நிசப்தமாக விருக்க வேண்டுமென்று ஆஜ்ஞாபித்தான்.

---

* ஏதோ ஒரு லக்ஷ்யத்தை மனதில்வைத்து தியானம்செய்து, தியானம் முதிர்ந்த தியேயாகாரமாதல் (தியானிக்கப்பட்ட பொருளோடு அந்தர்பூத ஐக்யமடைதல்) பாவசமாதியாம். இந்த பாவசமாதி பாவாதீதமான நித்திய நிர்மல சத்தப்பொருளைக் குறித்ததாயின் அதுவே பூரணமாம். இதற்கு ஆதாரம் பின்வரும் திருமந்திரமாம்.

"கற்பனையற்றுக்கனல்வழியேசென்று
சிற்பனவெல்லாஞ்சிதட்டித்தபேரொளிப்
பொற்பினைநாடிப்புணர்மதியோடுற்றுத்
தற்பரமாகத்தகுந்தண்சமாதியே."

## On the Bringing up of Children.

## குழந்தைகளை வளர்த்தல்.

(367-பக்கத் தொடர்ச்சி.)

பெண்கள் நல்ல நாளில் தெருண்டு சோபன முகூர்த்தமாகிப் புருஷன்மாரோடு திரிகரணமும் ஒத்து இல்லறத்தில் சுகவாழ்வில் நோய் நொடியின்றி வாழும்போது அவர்கள் குலம் விளங்கக் குழந்தைகளுண்டாம். அக்குழந்தைகளின் சரீரம் திடமாயும் நோயில்லாமலும் தீர்க்கமான வயசுள்ளனவாயுமிருக்கத் தாய்தந்தையர்கள் தங்கள் சரீரத்தையும் மனதையும் சுத்தமாக வைத்தல் வேண்டும்.

கர்ப்பந்தரித்த நாள்முதல் பெண்டுகள் தங்கள் சரீரத்தை வெகு ஜாக்கிரதையாய்ப் பாதுகாக்கவேண்டும். ஏனென்றால் அகாலப்பிரஸவம் கருவழிதல் முதலிய பலகெடுதிகள் அஜாக்கிரதையால் நேரிடும். ஆகையால் கருப்பம் உண்டானதையறிந்துகொள்ளவும் அதுமுதல் சீத உஷ்ணங்கள் சரீரத்தில் மாறுபட்டுக் கெடுதி நேரிடாமலிருக்கவும் முதலில் சில கர்ப்பக்குறிகளை எடுத்துக் காட்டுகிறோம்.

மாதந்தோறும் வீட்டின் வெளியே விலகி நிற்கும் வழக்கம் நின்றுவிட்டதைக்கொண்டே ஒருத்தி தான் கர்ப்பமாய்விட்டதாக எண்ணக்கூடாது; ஏனென்றால் சிலவேளை சவுக்கியக் குறைவால் அப்படி நேரிடுவதுமுண்டு. நோயில்லாது சவுக்கியமாயிருந்தபோது அப்படி நேரிடுமானால் அதை ஓர் முதலடையாளமாக எண்ணலாம். கருப்பம் தரித்தது உண்மையானால் அதற்கு முன்னுண்டாயிருந்த பிணிகள் விலகியோடும். ஏனென்றால் நல்ல ரத்தம் உண்டாகி அது அதிகரிக்கும்போதுதான் கருத்தரிக்கும். எப்போதும் போலிராமல் சரீரத்தில் சவுக்கியம் காணப்பட்டால் அது கருத்தரித்ததற்கு நிச்சயமான முதலடையாளமாகும். இந்த அடையாளம் கருத்தரித்து ஒருமாதம் ஆன பிறகுதான் தென்படும். இதைச் செம்மையாய் நிதானிக்கச் சிலவேளை பின்னும் இரண்டுவாரஞ் செல்லும். ஏனென்றால் முதற் கர்ப்பமாகும் பெண்ணுக்குத் தன் சரீரத்தை நிதானித்தறிய வகையில்லை. முதல் முதலிலறிவது அநுபவமாகமாட்டாது. இரண்டாவது அடையாளம் ஒன்றுண்டு. காலையில் வாந்தி எடுப்பதும் காலைச் சாப்பாட்டில் விருப்பமில்லாதிருத்தலும் நோய் கொண்டாற்போல் வாடிக்கிடத்தலுமாம். இவைகளெல்லாங் காலை நேரத்தில் காணுமானால் கர்ப்பமுண்டானதை நாம் திடமாய்நிச்சயிக்கலாம். சந்தேகமில்லை.

கர்ப்பமாகி இரண்டு மாதமான மேல் வயிற்றில் வலியுண்டாகும். மார்பு பெருக்க ஆரம்பிக்கும். அங்குள்ள நரம்புகள் பச்சை நிறங்கொள்ளும். இரண்டு மார்பும் நல்ல நிறமுண்டாகி அழகுமிகும். மேலிடங் கொஞ்சம் தடிப்பமாகிக் கடினங்கொள்ள ஆரம்பிக்கும். முலைக்காம்பில் வெதுப்புமுண்டாகிக் கொஞ்சம் புண்படுதலுமுண்டாம். சுற்றிலும் கருநிறமான வட்டமுண்டாம். காம்பை நெருடினால், நீர் வழுவழுப்பாய்க் கொஞ்சம் பொசியும். கொஞ்சம் பாலும் பொசியும். இவைகள் தென்பட்ட மேல் கர்ப்பத்தைப்பற்றிச் சந்தேகிக்கவேண்டியதே இல்லை.

கருப்பையில் பிண்டம் அசைய ஆரம்பிப்பது நான்காவது சின்னமாம். இந்த அசைவு சில பெண்களுக்கு மூன்றாவது மாதத்திலும் வேறு பெண்களுக்கு ஐந்தாவது மாதத்திலும் உண்டாம். பிண்டம் அசைய ஆரம்பிப்பது பிண்டத்தில் ஜீவன்சேர்ந்த பிறகென்று சில பெண்பிள்ளைகள் மூடத்தனமாய் எண்கிறார்கள். ஜீவசத்தின்றிப் பிண்டம் எப்படி வளரும். பிண்டம் அசைய ஆரம்பித்த மேல்தான் பெண்கள் அதிகம் தளர்ந்து நோய் கொண்டதுபோல் மயங்கிக்கிடப்பார்கள். நரம்புகள் தளர்ந்துபோம் மயக்கம் அடிக்கடி தட்டும். ஓக்காளமுண்டாகும் உடம்பு படபடக்கும். சில பெண்களுக்குப் பிண்டம் இப்போது அசைகிறதென்று சொல்லவுந் தெரியாது.

ஐந்தாவது சின்னம் வயிறு அதிகம் பெருத்துக்காட்டுவதும் முன்னிருந்ததைவிடக் கெட்டியாவதுமேயாம்.

ஆறாவது சின்னம் கொப்பூழ் (வழக்கமாகத் தொப்புள் என்கிறார்கள்) மேலெடுத்து வெளியில் விரிவதுதான் முதலிரண்டு மாதத்தில் தொப்புள் உள்ளே குவியும் பிறகு பிண்டம் வளர வளர அது வெளியில் மேலெடுத்து வந்து பிறகு பள்ளம் என்பதே தோன்றாமல் சமனாகிவிடும்.

அதிகமான மெலிவும் வாட்டமும் ஏழாவது சின்னம். இது வேறு காரணத்தாலுமுண்டாகலாம். கர்ப்பக் குறிகளோடு சேரும்போது அதைக் கர்ப்பக்குறிகளோடு சேர்த்தே பகுத்தறியலாம். ஏனென்றால் கர்ப்பமுண்டானபேல் நோய் விலகுமென்பது எல்லோர்க்கும் உடன்பாடு.

தூக்கம் இல்லாதிருத்தல், அஜீர்ணத்தால் உண்டாகும் நெஞ்செறிவு, வாயில் எப்போதும் எச்சில் அதிகமாய் சுரத்தல், பல்வலி காணுதல், பசியற்றுப்போதல், மனக்கவலை மிகுதல், திடீரென்று கோபதாபமுண்டாதல், ஒருவேளை ஆகாரத்தை வேண்டுதல் மற்றொரு வேளை வேண்டாமென்று விலக்கல். உடம்பின்மேல் கந்தக நிறமாகச் சில இடத்தில் தோலின்நிறம் மாறுதல் முதலிய இவைகள் கர்ப்ப ஸ்திரீகளிடம் உண்டாகும் மாறுதல்களாம். சிலருக்கெல்லாம் காணும். சிலருக்குச்சில குறையும். கருப்பிண்டம் யாதொரு தீங்கில்லாமல் வளரத் தாயார் அதிக கவனமுள்ளவளாயிருத்தல் வேண்டும். ஏனென்றால் இவள் நோயும் மனக்கவலையும் கருப்பிண்டத்தைச் சாருமாயின் பிண்டம் சிசுவாய்ப் பிறந்த மேல் நோய்க்கும் சஞ்சலத்திற்கு முள்ளாகும்.

மாதர்கள் கர்ப்பமாயிருக்கும் காலவரையறை 40-வாரம் அல்லது 280-நாள் என்று பிரஸவ சிகிச்சையிற் பேர்பெற்றவர்களால் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. இது சாந்திரமான ரீதியாகப் பார்த்தால் பத்துமாதமாகவும் ஸவுரமான ரீதியாக பார்த்தால் ஒன்பது மாதமாகவும் ஆகின்றது. கர்ப்பவதிகள் தங்கள் க்ஷேமத்திற்கும் சுகப்பிரசவத்திற்கும் பிறக்குங் குழந்தைகளின் க்ஷேமத்திற்கும் வஸ்திரம் உணவு முதலிய விஷயங்களிலெல்லாம் ஜாக்கிரதையாயிருத்தல் பிள்ளைகளை வளர்ப்பதற்கு முதல் முதலில் வெகு முக்கியமாதலால் அதை விவரமாயும் தெளிவாயும் இனி விளக்குவோம்.

ஸெண்தோம், கல்விச்சாலை 4-5-06. } தி. வேங்கடராம ஐயங்கார்.
(தொடர்ச்சியுண்டு)

---

## THE STORIES OF MAHABHARATA—FOR CHILDREN.

*Specially written for the Vivekachintamani By S. Muthu Iyer, B.A.*

## மஹாபாரத கதைகள்—சிறுவர்களுக்குபயோகமாக எழுதப்பட்டன

(15-ம் புத்தகம் 243-ம் பக்கத்தொடர்ச்சி.)

ஆரணிய பருவம்.

### 4. அருச்சுனன் நிவாதகவச காலகேயரைக் கொன்றது.

ஸ்ரீகைலாசபதியாகிய சிவபெருமானிடம் பாசுபதாஸ்திரத்தைப்பெற்ற அர்ஜுனன், பின்பு, தேவேந்திரனால் அழைக்கப்பெற்றுத் தேவலோகத்துக்குச் சென்ற விருத்தாந்தங்களைக் கீழ்க்கதையில் எடுத்துக் கூறினோமல்லவா. பின்பு, அவ்வருச்சுனன் அத்தேவர்களுக்கு நெடுநாளாக அநேக இடையூறுகளைச் செய்துகொண்டிருந்த மகா கொடியவர்களாகிய நிவாதகவசர் என்னும் மூன்றுகோடி அசுரர்களையும் எதிர்த்து அநேக திவ்யாஸ்திரங்களைப் பொழிந்து சண்டைசெய்து அவர்கள் யாவரையும் கொன்று நாசஞ்செய்தான். இங்கு இக்கதையைப் படிக்கும் சிறுவர்களுக்கு ஒரு எண்ண முண்டாகலாம். நம்மைப் போலும் நரமனுஷன் ஒருவன் தேவர்களாலேயும் ஜயிக்க முடியாத மூன்று கோடி அசுரர்களைக் கொல்லலாவதோ? இதெல்லாம் கட்டுக்கதை. இதனால் நாம் அறிய வேண்டியது அர்ச்சுனன் மகாவீரன்; ஒருவனே பலபேரையும் கொல்லவல்ல பராக்கிரம முடையவன் என்பது மட்டுமே என்று எண்ணலாம். ஆதலின் இவ்விஷயத்தைப் பற்றி ஒருவார்த்தை சொல்ல இச்சிக்கிறேன். பிள்ளைகளே நீங்கள் அறிய வேண்டியது ஒன்றுண்டு முக்கியமானது. உலகத்தில்பலம் என்பது தேகபலம் மாத்திரம் அன்று; தேகபலத்திலும் மனோபலம் சிறந்தது. ஐம்பொறிகளை அடக்கி மனத்தைத் தன்வசப்படுத்தி மேலான புண்ய

களையும் ஈசுவராராதனங்களையும் செய்தவன் எவ்வளவோ அருமையான பலத்தை அடையக்கூடும். இதைத்தான் யோகசித்தி யென்றும் தபோமகிமை யென்றும் நம் முன்னோர்கள் சொல்வார்கள். அர்ச்சுனன் யோகசித்தியும் தபோமகிமையும் உள்ளவன். அந்த அசுரர்களும் அந்தத் தபோமகிமையையும் வரபலங்களையும் வெகுவாகப் பெற்றிருந்தபோதிலும், தாங்கள் பெற்ற வரங்களை நல்வழியில் உபயோகப் படுத்தாமல் தீயவழிகளில் உபயோகப் படுத்திப் புண்யங்களை இழந்து பாவங்களைப் பெருக்கிக் கொண்டமையால் அவர்கள் வரமும் பலமும் அருச்சுனன்முன் பயனில்லாமற் போயின. புண்ணியமானது மேன்மேலும் சுகத்தையும் பலத்தையும் கொடுக்கும். பாவமானது மேன்மேலும் துக்கத்தையும் பலவீனத்தையும் கொடுக்கும். இது சத்தியம், சத்தியம், முக்காலும் சத்தியம். ஆகையினாலே, புண்ய மூர்த்தியாகிய அருச்சுனன் பாப ரூபிகளாகிய அசுரர்களைக் கொன்றது ஆச்சரியமுமன்று. கட்டுக்கதையும் அன்று. கட்டுக்கதைகள் எங்கே யிருப்பினும்பாரதத்திலும் இராமாயணத்திலும் இல்லையென்று நம்புங்கள். ஆகையினாலே அருச்சுனன் அந்த அசுரர்களோடு போர்செய்த காலையில்,—

"ஆய்ந்த நூலறிஞர்க் கீந்த அரும்பொருளென்ன மேன்மேல்—வேந்தர் கோன் பகழியொன்று கோடியாய் விளைந்த தெங்கும்—மாந்தர்கைக் கொடாத புல்லர் வனப்பிலாச் செல்வம் போலத்— தேய்ந்தது வஞ்ச நெஞ்சத்திறலுடைத் தனுசர் சேனை," அதாவது, வேத சாஸ்திரங்களைப் படித்து அவற்றிற் கூறிய அறத்தின் வழியே நிற்பவர்களாகிய பெரியோர்களுக்குக் கொடுத்த பொருளானது ஒன்றே பலகோடியாக வளர்ந்து கொடுத்தவனுக்குப் பயனை விளைவிப்பதுபோல, அரசர்க்கரசனாகிய அருச்சுனன் விட்ட பாணங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கோடியாகப் பெருகிப் பகைவர் சேனையை நாசமாக்கின. வருந்தி வந்திரந்த யாசகர்களுக்கு ஒன்றும் கொடாத அற்பர்களது மலைபோன்ற செல்வமும் எப்படி நாளுக்குநாள் தேய்ந்து அழிந்து போகுமோ அதுபோல வஞ்சகமே குடிகொண்ட மகா கொடியவர்களாகிய அசுரர்களின் கடல்போன்ற சேனைகளெல்லாம் அந்தபாணங்களாலே மாண்டழிந்து போயின. என்றபடி.

அன்றியும் அருச்சுனனைப்போன்ற புண்யவான்களுக்கு அரூபியாகிய அறக்கடவுளின் சகாயமும் உண்டாகும் என்பதும் அப்போது நடந்த ஒரு விருத்தாந்தத்தால் அறியலாகும். அதாவது, அருச்சுனன் அப்பகைவர்மீது அனேக திவ்யாஸ்திரங்களை மழை போலப் பொழிந்தபோதிலும் அவர்கள் பெற்றிருந்த வரப்பிரபாவத்தினாலே உயிர்மாளாமல் அற்ற தலைகளும் அவையவங்களும் வெட்ட வெட்ட ஒன்றாகக் கூடிக்கொள்ள, அப்போது அருச்சுனனுக்கு அசரீரி வாக்கொன்று ஆகாயத்தில் தோன்றி, ஐய, இவர்களைக்கொல்லும் உபாயம் இன்னதென்று கூறியது. அன்றியும் அருச்சுனனுக்கு மகாதேவன் கொடுத்த பாசுபதாஸ்திரம் என்னும் படையும் அவன்தாளில் இடையறாத பத்தியும் இருக்க, இந்த முக்கோடி அசுரர்கள் அவனுக்கோர் இலக்கோ? ஈசன் அருளைபெற்றோர்க்கு எவ்வுலகங்களையும் ஆக்கிக்காத்து அழிக்கவும் வன்மையுண்டாம் அன்றோ? இவையெல்லாவற்றையும் ஆலோசியாமல், அருச்சுனனைக் கேவலம் மனிதனென்றும் அவனைப்பற்றிக்கூறியதெல்லாம்பொய்க்கதை யென்றும் எண்ணாதீர்கள். எண்ணுவார் எண்ணுக; ஹிந்துமதத்தை அவலம்பித்த இளைஞர்கள் நீவிர் அந்நிந்தைமொழிகளைக் கொள்ளாதொழியக்கடவீராக.

நிற்க, அருச்சுனன் நிவாதகவசரைக்கொன்றபின்பு, காலகேயர் என்னும் வேறு அறுபதினாயிரம் அசுரர்களையும் அவ்வாறே போர்செய்து கொன்று தேவர்களுக்கு நெடுநாளாகத் தொலையாமல் தொடர்ந்துவந்த துன்பங்களையெல்லாம் நீக்கினான். அதனால் தேவேந்திரன் அளவில்லாத ஆனந்தத்தை அடைந்து அருச்சுனனுக்கு அநேக திவ்யாயுதங்களும் வரங்களும் கொடுத்துத்தன் நகரத்தில் சிலநாள் வைத்திருந்து பின்பு பூவுலகுக்கு அனுப்பினான். இவ்வாறு அருச்சுனன் படைக்கலங்களும் பெருமையும் கீர்த்தியும் பெற்றுச்சிலகாலம் தேவலோகத்திலிருந்து பின்பு தன் சகோதரர்களிடத்திற்கு மீண்டுபோய்ச்சேர்ந்தான்.

—(*)—

5· வீமசேனன் சுகந்த புஷ்பம் கொண்டு வந்தது.

இவ்வாறு அருச்சுனன் இந்திரபுரியில் இருந்து வருங்காலத்தில், இங்குக்காட்டில், ஒருநாள், உலகத்தில் ஒருவரும் காணுத அழகும் பரிமளமும் மிக்க ஒருமலர் ஆகாயத்திலிருந்து திரௌபதியின் முன்னில் விழ்ந்தது. அவள் அதையெடுத்து அதன் அழகையும் பரிமளத்தையும் வியந்து அதனை வீமனுக்குக்காட்டி அதுபோல ஒருமலர் தனக்குச் சம்பாதித்துக் கொடுக்கவேண்டுமென்று கேட்டனள். பெண்கள் விரும்பியதொன்றை அவர்களுக்குச் சம்பாதித்துக் கொடுத்தல் ஆண்மையுள்ள புருஷர்களுக்குக் கடனேயன்றோ?

ஆதலின் அப்படியே ஆகுக என்று அவன் புறப்பட்டான். பின்பு அம்மலர் இருப்பது அளகாபுரியென்னும் குபேரன் இராஜதானியிலென்றும் அதைப்பெறுவது மிகவும் அசாத்தியம் என்றும்கேள்விப்பட்டும்; வீரராயிருப்பவர் முன்வைத்த காலைப் பின் வைப்பார்களோ? வையாராதலின் அதைரியப்படாமல் அவ்வளகைநகரை நோக்கிச் செல்வானாயினன். போகும்போது, வழியில், வாயு புத்திரரும் தனக்குத் தமயனருமாகிய அநுமாரைத் தரிசித்து அவரோடு தன் வரலாறுகளைச்சொல்லி அவரிடத்தில் சிலவரங்களையும் பெற்றுக்கொண்டு அனேக தூரங்கடந்து சென்று யக்ஷலோகத்தை அடைந்து, அங்கு அளகாபுரியில், ஓர்பொய்கையின் கரையில், அநேக லக்ஷம் யக்ஷரும் ராக்ஷசர்களும் காவல் காத்திருக்கும் அச்சுகந்த மலர்ச் சோலையைச்சார்ந்தான். அங்கு அக்காவலாளருக்கும் வீமனுக்கும் கோரமான யுத்தமுண்டாகியது—அவர்கள் எல்லாரையும் வீமன் ஒருவனுக நின்றெதிர்த்துத் தன்கதாயுதத்துக்கு இரையாக்கினன்.

இங்கும், இளைஞர்களே, நீங்கள் இமே அருச்சுனன் விஷயமாகக் கூறியதை நினைத்துக்கொள்ளத்தக்கது: வீமனும் அருச்சுனன்போலவே அனேக புண்யங்களைச் செய்தவன். சிவபத்தியில் அவனிலும் சிறந்தவன். தெய்வத்தன்மையுள்ளவன். ஆதலின் அவனுக்கு பலத்திலாவது வரத்திலாவது, சாமர்த்தியத்திலாவது யாதும் குறைவில்லை. அவனல் சாதிக்கமுடியாத காரியமும் இல்லை. இதை அவ்வீமனுக்கு விடைகொடுத்தனுப்பிய அநுமார் வாக்காலே அறியத்தக்கது:—

'அறிவும் வாய்மையும் தூய்மையும் அன்புமின்னருளும்—பொறையும் ஞானமும் கல்வியும் புரிபெருந்தவமும்—நெறியும் மானமும் வீரமும் நின்னவாதலினற்—பெறவுனக்கரிதாயதே தென்றனன் பெரியோன்.'

அதாவது, விவேகமும், சத்யமும், சித்தசுத்தியும், அன்பும், ஜீவகாருண்யமும், க்ஷமையும் ஆத்மஞானமும், கல்வியும், தபசும், நல்லொழுக்கமும், மானமும், வீர்யமும் ஆகிய இந்த மேன்மையான சற்குணங்களையெல்லாம் நீ பெற்றிருத்தலினல் உனக்குப் பெறுதற்கரிதாகிய பதார்த்தம் யாதொன்றுள்ளது என்று அநுமார் சொல்லி அனுப்பினர். என்றபடி.

ஆகலின் இவ்விஷயத்திலும் நீங்கள் சந்தேகப்படவேண்டாம், சித்தசுத்திக்கும், ஞானத்துக்கும், பத்திக்கும் ஒழுக்கத்துக்கும், தவத்துக்கும் தக்கபடி ஒருவனுக்கு புத்திவலியும் மனேவலியும், தைரியமும் தேகவலியும் இருக்கும் என்பதில் சற்றும் ஐயமேயில்லை.

இவ்வாறு அரக்கர் சேனைகளைக் கொன்றழித்தபோது தூதவர் சென்று அளகைநாதனேடு சொல்ல அவன் தன் சேனைத்தலைவனை அனுப்பினன். அவனையும் வீமன்வென்று புறங்கண்டதனல் அவன் ஓடிக் குபேரனேடு நடந்த விர்த்தாந்தங்களைச் சொன்னன். பின்பு குபேரன் அவ்வீமனேடு போர்செய்தலைவிட்டு அவனுக்கு வேண்டியதைக்கொடுத்துச் சமாதானமாதலே உசிதமென்றுகண்டு அவ்வாறே தன்மகனை அனுப்பி அவனுக்கு வேண்டியபடி சுகந்த மலர்களைக்கொடுத்து நல்லுரைசொல்லி அவன் கோபத்தைத்தணித்துச் சமாதானம்செய்துகொண்டான்.

இதற்குள்ளே இங்கு காட்டில் தருமநந்தனர் வீமசேனனைக் காணுமையால் கவலைகொண்டு பின்பு திரௌபதியால் விவரம் தெரிந்துகொண்டு அவன் போனவிடத்தில் என்ன நடந்ததோ யாதோவென்று விசாரப்

பட்டு வீமன் மகனாகிய கடோற்கசனை நினைத்தார். உடனே அக்கடோற்கசன் தேருடன்வந்து யாதுவேண்டுமென்று கேட்க அவனுக்கு நடந்த விவரங்களைச்சொல்லி வீமனைத் தேடும்பொருட்டு அளகை நகருக்குச் செல்லவேண்டுமென்ன: அவனும் அவர்களைத் தேரில் ஏற்றிக்கொண்டு தன் மாயாசக்தியினாலே தேரை ஆகாயமார்க்கமாகச் செலுத்தி சிறிதுநேரத்தில் வீமனிருந்த சோலையில் கொண்டுவந்துவிட்டான். வீமனுக்கு யாதும் கெடுதி வாராததுகண்டு தர்மநந்தரை சந்தோஷித்துப்பின்பு எல்லாருமாய்க் காட்டில் தம் இருப்பிடத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

## 6. சடாசுரன் மணிமான் என்பவர்களை வீமசேனன் வதைத்தல்.

அருச்சுனன் தன்னுடைய க்ஷேமங்களைப் பற்றி ரோமசமுனிவர் மூலமாய்த் தன் தமையன் முதலானோருக்குத் தெரிவித்து அவர்களுக்குத் தேறுதல் உண்டுபண்ணினபோதிலும் தான் இன்னமும் இந்திரலோகத்தை விட்டு வந்து சேரவில்லை. அக்காலத்தில் ஒருநாள் அக்காட்டிலுள்ள இருஷிகளெல்லாம் யானை புலி முதலான கொடிய காட்டுமிருகங்களால் வருந்தித் தர்மபுத்திரரை அடைக்கலமாக அடைய அவரும் அவர்கள்மேல் இரங்கித் தம் தம்பியாகிய வீமனை அழைத்து அவ்விலங்குகளை அழித்து அம்முனிவர்களின் துன்பத்தை நீக்கும்படிக் கட்டளையிட்டனர். அவனும் அவ்வாறே சென்றான். அவன் அவ்வாறு சென்றிருந்த காலத்தில் இங்கு ஒருநாள் சடாசுரன் என்னும் ஒரு கொடிய அசுரன் பிராமணவேஷங்கொண்டு பிக்ஷைக்கு வருவான்போலப் பாவனைசெய்து சமயம் நோக்கி திரௌபதி தேவியைக் கவர்ந்து ஆகாயமார்க்கமாய்ச் செல்ல, உடனே நகுல சகாதேவர் கண்டு அவனைத் தடுத்துப் போராடிக்கொண்டிருக்கையில் வீமசேனனும் நல்லவேளையாய் அவ்வழியே திரும்பிவந்தான். வருகையில் அவர்களைக் கண்டு அவ்வசுரனோடு போர்செய்து அவனைக் கொன்று திரௌபதியை விடுவித்தனன். பின்பு பாண்டவர்கள் அவ்விடத்தைவிட்டு நீங்கிக் கங்காதீரம் சென்று அங்கு நெடுங்காலம் சுகமாகத் தங்கியிருந்தார்கள்.

அக்காலத்தில் ஒருநாள் திரௌபதி தேவி முனிவர் மங்கையர்களோடு கங்கையில் ஸ்நானம் செய்துகொண்டிருக்கையில் அற்புதமான புஷ்பம் ஒன்று அந்நதியில் மிதந்துவருவதைக் கண்டு, அதனைக் கொண்டுவந்து வீமனுக்குக் காட்டி, அதுபோன்ற புஷ்பம் தனக்குச் சம்பாதித்துக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டாள். பெண்களுக்கு உடையிலும், அணியிலும், மலரிலும், இயற்கையாகவே விருப்பம் இருக்குமன்றோ. அதிலும் என்றும் காணாத மகா சுகந்தம் நிறைந்த தெய்வமலரைக் காணின் அவர்களுக்கு அவ்விருப்பம் பன்மடங்கு பெருகுதலும் இயற்கையேயாகும். ஆதலின் திரௌபதி அதைக் கொணர்ந்து கொடுக்கும்படிக் கேட்டது சகஜமே. வீமசேனன் அவள் விருப்பத்தை நிறைவேற்றி அவளை மகிழ்வித்தலினும் தனக்குச் செய்யத்தக்கது வேறொன்று இல்லையென்று எண்ணுதலன்றி, (மகாசூரனாகிய அவனுக்கு) யாதேனும் சௌரியச்செய்கையைச் செய்வதைவிட்டுக் கட்டிப்போட்டாற்போல அக்காட்டில் காலம் போக்குவதும் கஷ்டமாகவே இருக்கும். ஆதலின், திரௌபதி கேட்டலும் அப்படியே ஆகுகவென்று புறப்பட்டான். புறப்பட்டு, அந்நதிக்கெதிர்முகமாக அதன் தலைப்பை நோக்கி நெடுந்தூரம் சென்றும் ஒன்றையும் காணவில்லை. ஆயினும் அரியகார்யத்தை மேற்கொண்டவர் அதைரியம் அடைவார்களோ? கடைசியில் அவ்வாறு போகப் போக அளகாபுரியை அங்கு கண்டான்.

வீமசேன் அளகை நகரை அடைந்து முன்போலவே காவலாளர்களைத் தனக்கு வேண்டிய புஷ்பங்களைக் கொடுப்பீராகவென்ன, அவர்கள் அதற்கிணங்காமல் குபேரனதுசேனைத் தலைவனாகிய மணிமான் என்பவனோடு சென்று கூறினர். அவன் வீமனால் தம்மவர் பட்ட பாடுகளையெல்லாம் மறந்தவனாய், அகங்காரத்தாலே யாவனோ ஒருவன் மனிதன் வந்து நம் சோலையிற் புகுந்து புஷ்பங்களைக் கொய்வது, நாம் அதற்குடன்படுவதா, என்று ஆக்குரோசம் கொண்டு அவ்வீமனோடு போராடி முடிவில் அவன் கைக் கதையால் வதையுண்டு, அந்தகன்புரியை அடைந்தான்.

இங்கு இவ்வாறு வீமன் சண்டை செய்துகொண்டிருக்கையில், அங்கு வனத்தில் தரும

புத்திரர் வீமனைக் காணாமையால் விசாரமுற்று விசாரித்தபோது திரௌபதியினால் சுகந்தமலரின் பொருட்டு அளகை நகரம் சென்றனன் என்று தெரிந்துகொண்டார். உடனே அவனுக்கு என்ன இடையூறுகள் வருமோ என்று வருந்தி அவனைச் சென்று கூட்டிவரும்படி முன்போல கடோற்கசனைச் சிந்திக்கவும் அந்தக்ஷணமே அவன் தேரோடு வந்துநின்றான். தர்மபுத்திரர் அத்தேரில் தம்பிமார்களோடு ஏறி அதிசீக்கிரமாக அளகாபுரியை அடைந்து குபேரனைக் கண்டு வணங்கித் துதித்து அவன் கோபத்தை மாற்றிச் சிநேகம் செய்துகொண்டு, தம்பியாகிய வீமனைக் கூட்டிக்கொண்டு பூவுலகத்துக்கு மீண்டும் வந்து சேர்ந்தார். பின் சில நாளைக்கெல்லாம் அருச்சுனனும் தேவலோகத்திலிருந்து மீண்டும் வர எல்லாரும் மனம் களித்துச் சுகமாக வாழ்ந்திருந்தார்கள்.

### 7. துருவாசமுனிவர்க்கு விருந்திட்ட கதை.

பாண்டவர்கள் ஐவரும் திரௌபதியோடும் வனத்தில் வாசம் செய்துகொண்டிருக்கையில், ஒருநாள் மத்தியானவேளையில், துர்வாசமுனிவர் பல்லாயிரம் முனிவர்களோடு அங்கு எழுந்தருளினார். உடனே தருமபுத்திரர் எதிர்கொண்டழைத்துவந்து அர்க்கியபாத்யாதிகளால் உபசரித்து ஆசனத்தில் இருத்தி வணங்கி நிற்றலும் அம்முனிவர் ஆசிமொழி கூறி அவரை நோக்கி ஓ தர்மநந்தனா, நாங்கள் வெகுதூரத்தில் இருந்து வருகிறோம். பொழுதும மத்தியானம் ஆய்விட்டது; பசியால் மிகவும் வருந்துகின்றோம். எங்கள் பசி நீங்கச் சாப்பாடு போடவேண்டுமென்றார். 'ஏற்றவர்க்கு நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தாரானாலும் இல்லையென மாட்டா ரிசைந்து' என்ற முதுமொழிக்கேற்பத் தருமபுத்திரர் அதற்கிசைந்து நீங்கள் ஸ்நானம் செய்து வாருங்கள் என்று சொல்லி அனுப்பினார். முனிவர்கள் போனபின் யுதிஷ்டிரர் தம்பிமார்களையும் துரோபதியையும் நோக்கி இப்போதென்னசெய்வது? இவ்வளவு பேர்களுக்கும் இப்போது எப்படி உணவு அளிப்பது? முனிவர் இயற்கையிலேயே மகா கோபி, அதிலும் பசியும் சேர்ந்துவிட்டதால் சொல்லவேண்டியதில்லை. குளித்து வந்ததும் சாப்பாடு போடாமற்போனால் நம்மெல்லாரையும் சுட்டெரித்துவிடுவாரே! என்னசெய்வேன்? இதற்கோர் ஆலோசனை சொல்லுங்கள் எனச்; சகாதேவன், அண்ணா, இதற்கு ஆலோசனை வேறென்னுள்ளது? ஆபத் சகாயகராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானைத் தியானிப்பதைத் தவிர வேறே மார்க்கத்தைக் காணேனென்றனன். அதுகேட்டு தருமபுத்திரரும் மனமகிழ்ந்து அவ்வாறே துவாரகாவாசராகிய பெருமானைத் தம் மனதிலே தியானித்தனர். உடனே 'எப்போதியாவர் எவ்விடத்தில் எம்மை நினைப்பார் என நின்ற, ஒப்போதரியா னுதிட்டிரன்றன் உளப்போதிடைவந்துதித்தானே' என்றபடி பக்தரக்ஷகராகிய பெருமானும், எவர் எம்மை எப்போது தியானிக்கப்போகிறார்கள்; யாம் அவர் துன்பத்தைத் துடைப்போம்; என்று கருதியிருத்தலினாலே அவ்வுதிட்டிரர் மனதில் தோன்றி வெளிவந்ததுபோல அவர்கள் முன்வந்து நின்று என்னை நினைத்த காரணம் யாதென்று கேட்டார். அப்போது பாண்டவர் ஆனந்தபரிதராய் மனக்கவலையெல்லாம் நீங்கிப் பெருமானை வணங்கிப் பூசித்து நடந்த விருத்தாந்தங்களைக் கூறினார்கள். அதுகேட்டுப் பெருமானும் நீங்கள் விசாரப்படாதீர்களென்று அவர்களைத் தேற்றி திரௌபதியை நோக்கி, நங்காய், இன்று சமைத்தபாத்திரத்தில் இன்னம் ஏதாவது மிகுந்ததுண்டா? என்ன, அவளும் இருப்பதைத் துடைத்து ஒரு கவளம் அன்னத்தைத் [illegible]டியெடுத்து இறைவன் கையில் கொண்டுவந்து கொடுத்தாள். அந்த அன்னத்தைப் பெருமான் தமது வாயில் இட்டு உண்ணுதலும், அங்கு தடாகத்தில் ஸ்நானம்செய்து நித்திய கர்மங்களைச் செய்துகொண்டிருக்கும் முனிவர்கள் உடனே பசிப்பிணி நீங்கி அமுதமுண்டவர்போல வயிறுநிரம்பப் பெற்று மனம்பூரித்தார்கள். ஆ! ஆ! இதென்ன அற்புதம். இப்புதுமையும் மகிமையும் வேறு எங்கு கேட்டிருக்கின்றோம்? பகவான் சர்வாத்மாக்களிலும் ஒப்பவீற்றிருக்கும் உண்மைக்கு இதனினும் வேறு அத்தாட்சி வேண்டுமோ? அன்று சிவபெருமான் அருச்சுனன் கையால் அடிபட்டபோது அவ்வடி உலகமெல்லாம் படச்செய்து காட்டிய உண்மையையே இன்று பகவான் கண்ணபிரானும் ஏகதேசத்திற் காட்டியருளினார். அப்போது, வயிறும் வடிவும் மனமும் வாயும் கண்ணும் யாவும் தண்ணென்று குளிர்ந்து தளர்ச்சி நீங்கிய துருவாசமுனிவர் மிகவும் ஆச்சரியம் அடைந்து, இதெல்லாம் நீல

மேகச்யாமள மூர்த்தியாகிய பெருமானுடைய திருவிளையாட்டே யென்றுணர்ந்து, விரைந்து வந்து, கண்ணனையும் தர்மபுத்திரரையும் கண்டு ஆனந்தித்து, யுதிஷ்டிரரை நோக்கி, ஓ ராஜேந்திரா, தேவர்களுக்கும் கிடையாத பாற்கடலிற் பிறந்த அமிர்தத்தை உண்டோம் இன்றையதினம். உன்னுடைய அருளால் அவ்வளவோ நாம் பெற்றது ? எவ்வுலகத்தவருக்கும் காணுதற்கரிய கருமுகில் வண்ணனாகிய கண்ணனது சீர்பாதங்களையும் கண்டு மகிழப்பெற்றோம். உன்னை அரசனென்று கொண்டாடினபேர்க்குக் குறையேதுள்ளது? என்று புகழ்ந்து பின்னும் அவர்களை நோக்கிக் கூறுவார்.— இன்று நாங்கள் இங்கு வந்தது அகஸ்மாத்தாய் வரவில்லை. நேற்றுத்தினம் நாங்கள் துரியோதனனிடத்தில் போயிருந்தபோது அவன் எங்களைப் பாலும் தேனும் கனியும் நெய்யுமாகப் பஞ்சபக்ஷ்ய பரமான்னங்களோடு உணவளித்து உபசரித்தான். அப்போது நான் மனமகிழ்ந்து உனக்கு யாது வரம் வேண்டுமென்று கேட்டேன். அவன் உம்மிடத்துள்ள பொறுமையாலே உம்மை அழிக்கக் கருதி உங்களிடத்தில் வந்து இவ்வாறு உணவளிக்கும்படிக் கேட்கவேண்டுமென்று வேண்டினான். அதற்கிணங்கி நானும் அவ்வாறே செய்தேன். உங்கள் பெருமையை உணர்ந்தேனில்லை. இனியுனக்கு வேண்டும் வரத்தைக் கேட்பாயாக என்றார். அதற்குத் தர்மபுத்திரர், தனக்கொருவர் தீமைகளைச் செய்யினும் பிறருக்கொருபோதும் தீமைசெய்யாத பெருங்குணத்தவர் ஆதலினாலே, அம்முனிவரை நோக்கி, சுவாமீ எம்மைப் பகைத்த துரியோதனியர்கள் தேவரீரை இவ்வாறு தூண்டிவிட்டு ஏவல் கொண்டதற்காக அவரிடத்து யாதும் கோபம் கொள்ளாமல் அவரை மன்னித்தலே யான் வேண்டும் வரம் என்னத், துருவாசமுனிவரும் அவ்வாறே அவ்வரத்தை அளித்துத் தம் இருப்பிடம் சென்றார். கண்ணபிரானும் தமது துவாரகாபுரிக்கு மீண்டார். பாண்டவர்கள் பின்னும் அவ்வனத்தே சிலகாலம் தங்கியிருந்தார்கள்.

எஸ். முத்து ஐயர், பி. ஏ.

---

## ALLAHABAD OR PRAYAG.

## பிரயாகை

அல்லது

### அலகாபாத்.

இது வடமேற்கு மாகாணத்தி லெப்டினெண்டு கவர்னர் வாசஸ்தலமாயும் மாகாணத்தின் தலைமைப்பட்டணமாயுமிருக்கிறபடியாலும், டில்லி, காசி, ஆக்ரா, கல்கத்தா, பம்பாய் முதலிய பிரதான நகரங்களுக்குச் செல்லும் இருப்புப்பாதை வண்டிகள் தங்கிப் போகுமிடமாதலாலும், இந்த மாகாண ஐகோர்ட் இவ்விடத்திலிருக்கிறபடியாலும், ரயில் ஸ்டேஷன் பிர்மாண்டமாய் கட்டப்பட்டு சிறந்த வடிவமாயிருக்கிறது. 3-வது வகுப்புப் பிரயாணிகள் தங்குவதற்கு சுமார் ஒரு பர்லாங்கு விஸ்தாரமான கட்டடம் கட்டப்பட்டிருக்கிறது. இந்த ஸ்டேஷனில் இறங்கினால் பக்கி, எக்கா, என்ற இரண்டுவிதமான வண்டிகள் கிடைக்கின்றன. இவைகளில் ஏறிக்கொண்டு வாசத்திற்கு தகுகியான டேராகஞ் என்ற கங்கைநதியோரத்திலுள்ள ஒரு கிராமத்திற்குப் போவது நலம்.

இந்தவிடம் திரிவேணி சங்கமத்திற்கு சமீபமாயும் யாத்திரைக்காரர்கள் தங்குவதற்கு வசதியான வீடுகளையுடையதாயுமிருக்கிறது. இவ்விடத்தில் சுமார் 1000 வீடுகளுக்கு அதிகமிராது. அனேகமாய் கங்காபுத்திரர்கள் தானதிகம். ஒரு தபாலாபீசும் போலீஸ் டாணாவுமிருக்கிறது. நமது நாட்டுக்கோட்டை செட்டிமார்கள் இவ்விடத்தில் ஒரு அன்னசத்திரம் போட்டிருக்கிறார்கள். இதைத்தவிர வேறு சில சத்திரங்களுமுண்டு.

பூலோக சிருஷ்டிக்குமுன் பரமாத்மாவானவர் பாலரூபத்துடன் இவ்விடத்திலிருந்த அக்ஷயவடம் என்னும் ஆலமரத்தின் இலையின் பேரில் வீற்றிருந்ததாகவும், அது பிரமஸ்வரூபமானதென்று எண்ணப்பட்டு வந்ததாகவும், பிரபஞ்ச சிருஷ்டியான பிறகும் அந்த விருக்ஷம் சுவர்ணமயமாய் பிரகாசிக்க பிர்மாவானவர் இந்தவிடத்தில் பத்து அசுவமேத யாகங்கள் செய்ததாகவும், மகாவிஷ்ணு பிரசன்னராகி என்னவரம் வேண்டுமென வினவ —பிர்மாவானவர் இந்த ஸ்தலமானது விஷ்

ணு க்ஷேத்திரமென்று பெயர் பெற்றிருப்பதோடு எனதுபெயரும் சம்பந்தப்பட்டு பிரகாசிக்கவேண்டுமென்று விரும்பியதாகவும், அதற்கு அவரும் சம்மதித்து இனிமேல் இந்த ஸ்தலம் விஷ்ணு - பிரஜாபதி க்ஷேத்திரமென்று அழைக்கப்படுமென்று கூறி மறைந்ததாகவும், இப்பொழுதும் இதற்கு தசாஸ்வமேத கட்டம் என்று பெயர் வழங்குவதாகவும் கூறப்படுகிறது.

மேலும் சூரியபகவானுடைய தேவியாகிய சாயாதேவி கர்ப்பவதியாய் தபசுசெய்துக்கொண்டிருக்கையில் சூரிய பகவான் அத்தேவியுடன் சேர எண்ணங்கொண்டு சமீபத்தில் நெருங்கவும் தேவி சம்மதிக்காமல் தடுக்க, ஆதித்தன் மிதமிஞ்சிய மோகத்தினால் அவளைத்தீண்டச் சென்றதாகவும், ஆதித்தனுடைய உஷ்ணத்தினால் மேற்படி தேவியின் கர்ப்பத்தில் பாதி சாம்பலாகவும் மற்றபாதி பிண்டமாகவும் மாறி இருவரும் பரவசமடைய அப்பொழுது ஹரிஹரர்கள் பிரசன்னராகி, ருத்திர மூர்த்தியானவர் தமது பராசக்தியை அந்த பிண்டத்திற்குள் ஆவாகனஞ்செய்து ஒரு புருஷனை ஜனிப்பித்து அந்த புருஷனுக்கு எமதர்மராஜன் என்று பெயரிட்டு தென்தேசங்களுக்கு அனுப்பி பாவிகளை சிக்ஷிக்கும்படி நியமித்ததாகவும், மஹாவிஷ்ணுவானவர் மேற்படி பிண்டத்தின் பாதியாகிய சாம்பலில் தமது சக்தியை ஆவாகனஞ்செய்து யமுனை என்ற பெயருடன் ஒரு ஸ்திரீயை ஜனிப்பித்து அவளை நதிரூபமாய் உலகத்தாருடைய பாபங்களைப்போக்கும்படி நியமித்ததாகவும் ஸ்தல மகத்துவத்தில் கூறப்படுகிறது. தவிர பகீரதர் கங்கையை பூலோகத்திற்குக் கொண்டுவரும்பொழுது, கங்கை இவ்விடத்தில் பிரவாகிக்க யமுனை எதிர்க்கொண்டுபோய் வணங்கி தன்னுடன் கலந்து பிரவாகிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க கங்கை யமுனையை நோக்கி “ஏநங்காய்! நீ பிரதிஷ்டை பெற்றவள், நான் உன்னுடன் கலந்து பிரவாகித்தால் உன்பெயர் மட்டும் பிரபலமாகுமேயன்றி எனது பெயர் வெளிப்படாதென மயங்குகிறேன்” என்று சொல்ல, யமுனை கங்கையைநோக்கி “ஏ தேவி! பயப்படாதே, இந்த க்ஷேத்திரமுதல் பெயர் உன்னதாகவே யிருக்கட்டு”மென்று சம்மதிக்க, கங்கையும் யமுனையும் இவ்விடத்தில் சங்கமமானதாகவும், அன்றுமுதல் கங்கையின் ஜலம் வெண்மையாயும், யமுனையின் ஜலம் இளநீலவர்ணமாகவுமிருந்தாலும் சமுத்திரத்தில் விழுகிறவரையில் கங்கை என்ற பெயரே பெற்றதாகவும் சொல்லப்படுகிறது.

அன்றியும் பிர்மாவானவர் அஸ்வமேதயாகங்கள் செய்தபிறகு இந்த ஸ்தலத்தை வர்ணிக்கத் தொடங்கி முடிக்கமாட்டாமல் மயங்க சரஸ்வதி அதை முடித்துக்கொடுப்பதாகக்கூறி முடிக்கமாட்டாமல் திகைத்து உலகரக்ஷணார்த்தமாக யோசனை செய்துக்கொண்டிருந்த திரிமூர்த்திகளைப்பார்க்க நாணியகாலத்தில், படபன் என்னும் இராக்ஷதன் தோன்றி தனது கடும்பசியினால் உலகத்தாரை இம்சைசெய்யத் தொடங்கவே, சரஸ்வதியானவள் அவன்முன் தோன்றவும், அவன் மோகித்து நெருங்கவும், பசிப்பிணியால் வருந்தும் உன்னை விவாகஞ் செய்துக்கொள்ள பயப்படுகிறேனென்று சரஸ்வதி கூறவும், அந்தப் பசியை நீதான் தீர்க்கவேண்டுமென்று ராக்ஷதன் வேண்டவும், பசி நீங்க ஆகாரம் கொடுப்பதாக அழைத்துக் கொண்டுபோய் சமுத்திரத்தைக்காட்டி ஜலத்தை பானஞ்செய்யும்படிவிட்டு பிரயாகை ஸ்தலத்தைக்காண வந்ததாகவும், அப்பொழுது கங்கையும் யமுனையும் இந்த சரஸ்வதியின் நடனத்தைக்காண விரும்பியதாகவும், சரஸ்வதி பிர்மாவுடன் கூறியபடி பிரயாகையை வர்ணிக்கமாட்டாதவளாய் வெட்கி தகப்பனார் பரிகாசம் செய்வாரென்ற எண்ணத்தினால் பயிரங்கமாகத் தோற்றாமல் கங்கை யமுனைக்குள் அடக்கமாகி பிரவாகத்தில் விளையாடிச் சென்றதாகவும், இப்படி மூன்று நதிகளும் சங்கமமாவதால் மோக்ஷலக்ஷ்மி தலைரோமத்தின் மூன்று பின்னலென்றும், அதாவது கங்கையும் யமுனையும் இந்தவிடத்தில் உலகத்தாருடைய பாவங்களைக் கத்தரிக்க கத்தரிக்கோல்களானதாகவும் அக்கோல்களுக்கு இடையே ஆணியாக, சரஸ்வதி ஸ்தானத்தைப்பெற்று உபகரித்ததாகவும், ஆகவே திரிவேணி என்றுபெயர் பெற்று விளங்குவதாகவும் கருதப்படுகிறது. இப்பொழுதும் தம்பதி சகிதமாக இந்த க்ஷேத்திரத்திற்கு வருகிற யாத்திரைக்காரர்கள் திரிவேணிதானம் என்பதாக ஒருசடங்கு செய்கிறார்கள். அதாவது—புருஷனும் ஸ்திரீயுமாக நூதன வஸ்திரங்களைத்தரித்துக்

கொண்டு வாத்தியத்துடன் திரிவேணி சங்கமஸ்தானத்திற்குச் சென்று ஸ்திரீயினுடைய சிரோரோமத்தை மூன்று பிரிவாக்கி புருஷன் பின்னியபிறகு திரிவேணிக்கும் கத்தரிக்கோலுக்கும் பூஜித்து பிரார்த்தனைசெய்துக்கொண்டு ஸ்திரீயின் சிரோரோமத்தின் நுனியில் மூன்று அங்குல பிரமாணம் கத்தரித்து ஒரு தட்டத்தில்வைத்து கங்கா புத்திரனுக்கு தானம் செய்கிறார்கள். இந்த தானத்தைப் பெற்றுக்கொள்ளுவதற்கு கங்காபுத்திராள் அதிக தொகை கேட்கிறார்கள். அவன் அதைப்பெற்று தொகை முதலியவைகளை எடுத்துக்கொண்டு கத்தரித்த ரோமத்தை திரிவேணியில் விடுகிறான். அது சற்று தூரம் செல்வதற்குள் நீரினால் சுழற்றப்பட்டு அமிழ்த்தப்படுகிறது. இந்தச் சடங்குசெய்கிற ஸ்திரீகளுக்கு விதவாஜென்மமில்லை என்பது ஐதீகம். கங்காபுத்திரர்களுக்கு கொடுக்க சக்தியில்லாதவர்கள் தாங்களே மேற்படி சடங்கைசெய்து ரோமத்தை திரிவேணியில் போட்டுவிடுகிறார்கள். தவிர இந்தவிடத்தில் பிராணதத்தம் செய்பவர்கள் ஜன்மாந்திரத்தில் விரும்பிய சித்திகளையடைந்து அனுபவித்து, மறுபடியும் இந்த புண்ய பூமியில் பிறந்து, பிறவித்துன்பமின்றி பேரானந்தத்தை யனுபவிப்பார்களென்று ஸ்தலபுராணத்தில் கூறியிருப்பதால் இக்காலத்திலுங்கூட அநேகதபசிகள் அந்தரங்கமாக கங்கையில் இறங்கி பிராணதத்தம் செய்வதாக பிரஸ்தாபமுண்டு.

முசுகுந்த பிர்மசாரி என்னும் ஓர் தபசி தான் மண்டலாதிபதியாக வேண்டுமென்று கருதி தனது தேகத்தில் பாதி பாகத்தை யறுத்து யக்கியத்தில் ஆகுதி செய்து பிராணனைவிட்டதாகவும், அவருடைய சிஷர்களும், அந்த குருவுக்கே மறுஜன்மத்தில் மந்திரிகளாக வேண்டுமென்றும், அப்பொழுது பூர்வ ஜன்மகியானமிருக்க வேண்டுமென்றும் பிரார்த்தித்துக்கொண்டு, இந்த ஸ்தல மகத்துவத்தை எட்டு ஸ்லோகங்களாகச்செய்து ஒரு ஓலையிலெழுதி கடலைபொரி விற்றுவந்த ஒரு கிழவியிடம் கொடுத்து மேற்படி யாக குண்டத்தில் விழுந்து பிராணனைவிட்டதாகவும், மறுஜன்மத்தில் அந்த முசுகுந்தன் அக்பர்பாதுஷாவாகப் பிறந்து டில்லியில் சக்கரவர்த்தியாயும், சிஷர்கள் அவருடைய மந்திரிகளாயும் பிறந்திருக்கும் காலத்தில் ஒரு நாள் மந்திரிகள் கடலைபொரி விற்றுவந்த கிழவியிடத்திலிருந்த ஸ்தல மகத்துவமாகிய எட்டுஸ்லோகத்தை வாங்கிக்கொண்டுவந்து பாதுஷாவிற்குக் காட்ட அவர் அதிக ஆனந்தமடைந்து அன்றுமுதல் இந்த ஸ்தலத்திற்கு அலகாபாத்து=அல்லா=கடவுள், பாத்து=பட்டணம், என்று பெயரிட்டு அன்னியர் இதை அழிக்காதபடி ஒரு அழகான கோட்டையையும் கட்டினதாகவும் சொல்லப்படுகிறது. இந்தக் கோட்டை கங்கையமுனை சங்கமமாகுமிடத்தில் எப்படிப்பட்ட பிரவாகத்திற்கும் அசையாதபடி கட்டப்பட்டிருக்கிறது. கோட்டையை சுற்றிய அகழில் இப்பொழுது ஜலமில்லை. ஆள் ஒன்றுக்கு ஒரு பைசா வாங்கிக்கொண்டு கோட்டைக்குள் விடுகிறார்கள். ஒரு சிபாய் நேராக பிரயாகை ஈஸ்வரர் ஆலயத்திற்கு அழைத்துக்கொண்டு போகிறான். இந்த ஆலயம் பூமிமட்டத்திற்குக் கீழ் செய்யப்பட்ட குகைபோன்றது. இந்த ஆலயத்திற்குள் விநாயகர், தண்டபாணி, கங்காதேவி, மகாவிஷ்ணு முதலிய பல விக்கிரகங்களிருப்பதுடன் பூர்வமான வடவிருக்ஷத்தின் அடிபாகமுமிருக்கிறது. மேல் கிளைகளை வெட்டிவிட்டார்கள். ஆயினும் மரம் பட்டுப்போகவில்லை. வருஷத்திற்கு ஒருதடவை சில தளிர்கள் தோன்றி வாடிப்போவதாகத் தெரியவருகிறது. இவ்விடத்தில் சில பண்டாக்கள் என்றவர்களிருந்துக்கொண்டு யாத்திரைக்காரர்களிடம் பைசா கேட்கிறார்கள். இக்குகை அதிக இருட்டாயிருந்தபடியால் மேல் பாகத்தில் இப்பொழுது சிற்சில பலகணிகளை வைத்திருக்கிறார்கள். கோட்டையின் மற்ற பாகத்தில் யாத்திரைக்காரர்களை விடுவதில்லை. மேற்படி கோவிலைப்பார்த்துக்கொண்டு வெளிப்புறத்திலுள்ள கோட்டைவாயில் வழியாக வெளிப்படவேண்டியதே. இதற்குள் சில ஆபீசுகளும் பல யுத்த ஆயுதங்களுமிருக்கின்றன. ஒரு ஐரோப்பியருடைய சமாதியும் அதன்பேரில் ஒரு கோபுரம்போன்ற கட்டடமும் கட்டப்பட்டிருக்கிறது.

"திரிவேணிமாதவம் சாம்பம்' பரத்வாஜஞ்ச
வாசுகிம், வந்தே அக்ஷயவடாம் சேஷம்,
பிரயாகம் தீர்த்தநாயகம்"

—என்ற ஸ்லோகத்தை வடவிருக்ஷத்தடியில் சொல்லவேண்டுமாம்.

இந்த ஸ்லோகத்தின்படி இந்தக் கோட்டைக்குள் தரிசித்ததுபோக சோமேஸ்வரர் ஆலயம் கங்கைநதியின் அக்கரையிலிருக்கிறது. படகில் ஏறி அக்கரை சென்று சற்று தூரம் நடந்து சென்றால் ஒரு பூர்விகமான ஆலயமும் அதில் சோமேஸ்வர லிங்கமும் இருப்பதைத் தரிசிக்கலாம். டோராகஞ்சிலிருந்து முக்கால்மைல்தூரத்தில் பரத்வாசர் ஆஸ்ரமமிருக்கிறது. இவ்விடத்தில்தான் பரத்வாஜரை இராமலக்ஷ்மணர்கள்கண்டு தரிசித்ததாகக் கூறப்படுகிறது. இவ்விடத்தில் ஒரு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு பூஜை செய்து வரப்படுகிறது. மிகவும் ஆரோக்கியமும் இன்பமும் தரத்தக்கவிடம். இப்பொழுது இதற்கு சமீபத்தில் சில ஐரோப்பியர்களுடைய பங்களாக்கள் காணப்படுகின்றன. சற்றுதூரத்தில் சில தர்மசாலைகள் இராஜாக்களால் கட்டப்பட்டிருக்கின்றன. இதற்கு சமீபத்தில் சங்கரி ஆலயமென்ற ஒரு கோவிலிருக்கிறது. இந்த அம்மனுக்கும் தினப்படி பூஜை நைவேத்தியம் முதலியவைகள் கிரமமாக நடக்கின்றன. பிந்துமாதவர் கோவில் அரைமைல் தூரத்திலிருக்கிறது. இது அவ்வளவு பெரிய ஆலயமன்று.

திரிவேணியில் ஸ்நானஞ் செய்கையில் சொல்லும் சங்கல்பமாவது.—

“ஆரியவர்த்தந்தர்க்கபிர்ம்மவர்த்தைகதேச, விஷ்ணு பிரஜாபதி க்ஷேத்திரே, ஷட்கோணமத்தியே, அந்தர்வேதியாயாம், பாகிரதியாயாம் பஸ்சமபாகே, காளிந்திய உத்திரதீரே, வடஸஸ்யபர்வதிக்பாகே விக்கிரமசகே,பவுத்தாவதாரே,—வருஷே” என்று கூறி மற்றவைகளையும் தக்ஷணதேசரீதியாக் கூறப்படுகிறது.

இந்த அலகபாத்து என்னும் பட்டணம் சுமார் 10 மைல் சுற்றளவுள்ளதாய் 150,000 ஜனங்கள் வாசஞ்செய்யப்பட்டது. இவ்விடத்தில் இந்துக்கள் மகமதியர்கள் என்ற வித்யாசத்தைக் கண்டுபிடிப்பது சாத்தியமில்லாதபடி பஞ்சகவுடர்களுடைய நடை உடை பாவனைகள் மகமதியர்களைப்போலவே காணப்படுகிறது. ஸ்திரீகள் தங்களுடைய துணிகளை கோரமாய் அணிந்துக்கொள்வதினாலும், அளவுக்குமிஞ்சிய அதிகமான வெள்ளி நகைகளை அணிந்துக்கொள்வதினாலும் அவலக்ஷணமாகக் காணப்படுகிறார்கள். இவ்விடத்தில் கத்திரி, உருளைக்கிழங்கு, மொட்டைகோஸ், பட்டாணி, வெங்காயம், இஞ்சி, பொதினா, முள்ளங்கி, கொய்யாப்பழம் முதலியவைகள் ஏராளமாய் விற்கப்படுகின்றன. கொய்யாப்பழம், இலந்தைப்பழம் இவைகள் அளவுக்குமிஞ்சிய காத்திரமாயும் சரசமாயும் கிடைக்கிறது. நம் தேசவாசிகளுக்கு உடனே ஜ்வரத்தை யுண்டாக்கத்தக்கது. கோதுமைமாவு ரொட்டியும் துவரம்பருப்புமே இவ்விடத்திய ஜனங்களுக்கு முக்கிய ஆகாரமாதலால் நல்ல அரிசி, புளி, மிளகாய், நெய் முதலியவைகள் கிடைப்பதில்லை. பலர் கோதுமைமாவில் செய்த பூரி, லட்டு முதலியவைகளைத் தின்று காலங்கழிக்கிறார்கள். இவ்விடத்தில் மாடுகளும் எருமைகளும் நன்றாக வளர்ந்து கொழுத்து புஷ்டியாகவும் அழகாகவும் காணப்படுகின்றன. சென்னையில் ‘ரேக்ளா’ என்று கூறப்படும் வண்டிகளை விட சற்றுபெரிதான ‘எக்கா’ என்னும் ஜட்கா வண்டிகள் அதிக வினோதமாய் சவாரிக்கு சற்றும் ஒவ்வாததாயிருக்கிறது. இந்த வண்டிகளை உடனே முனிசிபால்டியாராவது கவர்ன்மெண்டாராவது நிறுத்தும்படி கட்டளையிட்டு சென்னையிலுள்ள ஜட்காவண்டிகள் போன்றவைகளைச்செய்து விற்றாவது காட்டியாவது நடவடிக்கைக்குக் கொண்டுவரவேண்டும். ‘எக்கா’ என்னும் வண்டிகள் மழைக்கும் வெயிலுக்கும் உபயோகமின்றி யிருப்பதுமல்லாமல் மகா அநாகரீகமாயும் அபாயகரமாயுமிருக்கிறது. இந்த ஆபாசமான வண்டியின் அடிப்புறத்திலுள்ள பெட்டிகளை பித்தளை தகட்டினால் செய்திருக்கிறார்கள். பக்கிகள்

என்னும் கோச்வண்டிகள் கூடியவரையில் நன்றாகவிருந்தாலும் அதிகமான ஆட்களையும் சாமான்களையும் ஏற்றுவது பரிதாபமாயிருக்கிறது.

கபிலை ஏற்றம் இறைக்கும் மாதிரி இவ்விடத்தில் வித்தியாசப்படுகிறது. பரித்தண்ணீரை துலைவாயில் ஒருவன் ஊற்றியவுடனே எருதுகளின் நுகத்தடியில் மாட்டியிருக்கப்பட்ட வடக்கயிற்றை, எருதுகளை ஓட்டிக்கொண்டு போகிறவன், கழற்றிவிடுகிறான். வடக்கயிறுடன் பரி அதிக வேகமாய் கிணற்றிலிறங்கிவிடுகிறது. உடனே நுகத்தடியுடன் தயாராயிருக்கும் வேறு மாடுகளைக் கொண்டுவந்து வடக்கயிற்றை மாட்டிவிடுகிறான். இப்படி ஒரு ஏற்றத்திற்கு மூன்றுஜோடி மாடுகளை உபயோகிக்கிறார்கள். நமது தேசத்தில் மாடுகளை பின்னுக்குப் பின்னாக இழுத்து வருத்துவதுபோல் இவ்விடத்தில் வழக்கமில்லை—தண்ணீர் அதிகமாயும் வேகமாயும் இறைக்கப்படுகிறது.

இந்தப் பிராந்தியங்களில் கடைத்தெருவுக்கு'சவுக்கு' என்று சொல்லுகிறார்கள். இந்த கஸ்பாவிலுள்ள சவுக்கானது அதிக விஸ்தாரமானது. தெருக்களில் வீடுகள் 3-4-5 அடுக்கு மெத்தைகளோடு மகமதியர்களுடைய கட்டடபாவனையாகவிருப்பதன்றி கீழ் அடுக்குகளில் பலவித வியாபார வஸ்துக்களையுடைய கடைகளை யுடைத்தாயிருக்கின்றன. சவுக்கென்னப்பட்ட விடத்தில் சாயந்திரங்களில் சென்னையில் குஜிலி சேர்வதுபோல பலவித துணிமணிகளும், காய்கறி பழவர்க்கங்களும், பலவித தட்டுமுட்டுகளும் வந்து சேர்ந்து விற்கப்படுவதால் ஜனங்கள் நடந்துசெல்வதற்கும் வழியின்றி தவித்து நின்றுவிடுகிறார்கள். இவ்விடத்தில் வசிக்கும் அங்கிலேயர்கள் கேனிங்டவுன் என்ற விஸ்தாரமான விடத்தில் பங்களாக்களை அதிக அழகாக கட்டிக்கொண்டு வசிக்கிறார்கள். சுதேசிகள் வசிக்கும் பாகத்திற்கும் அங்கிலேயர்கள் வசிக்கும் பாகத்திற்கும் மத்தியில் ரயில்பாதை செல்லுகிறது. அங்கிலேயர்கள், வசிக்கப்பட்ட பாகத்தில் எல்ஜின், மேயோ, ஆல்பர்ட், ஸ்டேன்லி முதலிய ஐரோப்பியர் நாமத்தைக்கொண்ட தெருக்களிருக்கின்றன. இத்தெருக்கள் அதிக விஸ்தாரமானவைகள். இவ்விடத்தில் ஐகோர்ட், மேயோஹால் டவுன்ஹால், கவரன்மெண்டு காலேஜ், பீகம் ஜிஹாங்கிர் முதலிய கட்டடங்கள் பார்க்கத்தக்கவைகள். ஐகோர்ட் கட்டடம் நான்கு பிரிவாயிருக்கிறது. கவரன்மெண்டு காலேஜ்ஹால் அதிக பெரியது. இதற்கு ஜெயப்பூர் மகாராஜா வேண்டிய பணவுதவி செய்திருக்கிறதாகத் தெரியவருகிறது. இந்த கல்லூரியில் டில்லி, கான்பூர், லக்ஷ்மணபுரி, மதுரா, அயோத்தி முதலிய விடங்களிலிருந்து ஏராளமான பிள்ளைகள் வந்து படிக்கிறார்கள்.

இந்தப்பட்டணத்தில்அலகாபாத்து என்ற ரயில் ஸ்டேஷனைத்தவிர அல்லங்கஞ் என்ற ஒரு சிறிய ஸ்டேஷனுமுண்டு. டேராகஞ் என்ற ஊரிலிருந்து இந்த ஸ்டேஷனுக்கு மூன்றுமைலிருக்கலாம். யாத்திரைகாரர்கள் இந்த விடத்தில்தான் கங்காஜலத்தை செம்புகளில் எடுத்து வாய்மூடி தங்கள் தங்களூர்களுக்கு அனுப்புகிறார்கள். இதற்கும் வடமேற்கிலுள்ள ஹரித்துவாரமென்ற விடத்திற்கு செல்லுகிறவர்கள் இவ்விடத்தில் கங்கை எடுப்பதில்லை. இவ்விடத்தில் யாத்திரைகாரர்கள் தீர்த்த ஸ்ரார்த்தம் செய்து பிதுர்க்களுக்கு பிண்டமிடுவது வழக்கம். வழங்கும் பாஷை இந்துஸ்தானியாதலால் அது தெரியாத தெக்ஷணதேச யாத்திரைக்காரர்களுக்கு கஷ்டம் அதிகமாகவேயிருக்கும்.

T. C. வெங்கட்ரமணய்யர்.

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(FROM SHAKESPEARE)

# ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு.)

*By Sri Rajanayaki.* (ஸ்ரீராஜநாயகி.)

## நாடகபாத்திரங்கள்.

### புருஷர்கள்.

இலேசவர்மன்—உதயபுரிராஜா.

ஹேமசந்திரஸிங்—இலேசவர்மாவின் தமையனாகிய இறந்துபோன ஹேமசந்திரவர்மாவின் குமாரன்—பட்டத்துக்கு இளவரசன்.

புலஸ்தியவர்மா—ராஜாவின் அந்தரங்க காரியதரிசி.

ஹரிராஜஸிங்—இளவரசனுடைய தோழன்.

லக்ஷ்மணஸிங்—புலஸ்தியவர்மாவின் குமாரன்.

வருணமித்ரன், கிருஷ்ணதாசன், உக்ரருத்திரப்பிரதாபன், கடோர்க்கஜசேனன், ஆனந்தரிகன் — ஆலோசனை சபையோர்.

பிருகத்சேனன், மதுக்கசேனன் — சேனை உத்தியோகஸ்தர்கள்.

வீரசேனன்—அரண்மனைக்காவல் சிப்பாய்.

பிரதாபஸிங்—ஜோதிபுரி ராஜ்யத்து இளவரசன்.

ராதாகிருஷ்ணன்—புலஸ்தியவர்மாவின் வேலைக்காரன்.

### ஸ்திரீகள்.

ஜோதிமஹால்—ஹேமசந்திரவர்மாவின் விதவை: ஹேமசந்திரஸிங்குக்குத் தாய்; தற்காலம் இலேசவர்மாவின் மனைவியாகிய இராணி.

உத்பலாக்ஷி—புலஸ்தியவர்மாவின் மகள்.

### இதரர்கள்.

புரோஹிதர்கள், பிரபுக்கள், சேனாபதிகள், சிப்பாய்கள், நாடகக்காரர்கள், தூதர்கள், சேவகர்கள், தோட்டிகள், ராஜஸ்திரீகள் பெருமாட்டிகள், முதலியோர்கள்.

இறந்துபோன ஹேமசந்திரவர்மாவின் பிதிருதேவதை.

ஸ்தலம் { ராஜபுத்திர சமஸ்தானம்.<br>உதயபுரி பட்டணம்.

காலம்:—டில்லி சக்ரவர்த்திகளின் காலம்.

"The blessed gods in servile masks
Plied for me my household tasks."—*Emerson.*

"The World means intensely, and means good;
To find out its meaning is my meat and drink."
—*Robert Browning.*

"If you are in need of the fruit of my labour,
I am in greater need of the labour itself,
I perish of rust and rest."—*Emerson.*

### காக்ஷி-3.

இடம்:—புலஸ்தியவர்மாவின் வீட்டில் ஒரு அறை.

காலம்:—பிற்பகல்.

(லக்ஷ்மணஸிங்கும் உத்பலாக்ஷியும் வருகிறார்கள்.)

லக்ஷ்மண:—என்னுடைய சாமான்களையெல்லாம் தயாராக எடுத்துக்கொண்டு விட்டேன்-போய்வருகிறேன், குழந்தாய், எனக்கு உத்தரவுகொடு! யாராவது இங்கிருந்து அவ்விடம் வருவதுண்டானால், என்னை மறவாமல் உன்னுடைய க்ஷேமத்தைப்பற்றி எழுதியனுப்பு.

உத்பலா:—கடிதம் கூட எழுதக்கூடாத படி உன்னை மறந்துவிடுவேனு என்ன?

லக்ஷ்மண:—யுவராஜா, ஹேமசந்திரஸிங் உன்னிடம் பிரியமாயிருப்பதைக்கண்டு அதிகமாக மயங்கிவிடாதே! இவையெல்லாம் யௌவனத்துக்கு சுபாவமான ஒரு விளையாட்டே ஒழிய நிரந்தரமாய் நிற்கக்கூடியதல்ல! எல்லாம் க்ஷணகாலத்தில் மாறிவிடக்கூடிய விஷயங்கள்! மூன்றே முக்கால் நாழிகைக்கு முத்துமழை!

உத்பலா:—அப்படியா நினைக்கிறுய்?

லக்ஷ்மண:—அதற்குமேல் ஒரு தூசுகூட மதிக்கவேண்டாம்! ஒரு மனிதனுடைய தேகம் பருத்து வளருவதுபோலவே அதனு

டன் அதன் மனதும் அதன் ஆசைகளும் அதற்கேற்ற கடமைகளும் மாறிக்கொண்டே வருகின்றன. இப்பொழுது அவர் உன்னிடத்தில் பிரியமாயிருப்பது வாஸ்தவந்தான். இப்பொழுது அவரைத் தடுப்பதற்கு ராஜ்யமாவது குடிகளாவது இல்லை. நாளைக்கு சிம்மாசனம் ஏறிவிட்டால், அவர் மனதும் அதன் ஆசைகளும் அவருடையதல்ல. ஒரு ஏழைக்குடியானவனுக்குள்ள சுதந்திரங்கூட அவருக்கு இல்லை. ஒரு ராஜ்யத்தின் க்ஷேமமுழுவதும் அவருடைய செய்கையைப்பொறுத்திருக்கிறது.

ஆதலால் அவர் ராஜ்யத்தார் சொல்வதையே கேட்கவேண்டும்! ஆதலால் அவர் உன்னிடம் பிரியமாயிருப்பதாகத் தெரிவித்தால் அவருடைய பதவியில் அவர் எவ்வளவுதூரம் தன் வார்த்தைகளை நிறைவேற்ற முடியுமோ அவ்வளவுமட்டும் நீ அவரை நம்பலாம். கொஞ்சம் புத்தி பிசகி அவரை அதிகமாக நம்பினால், பின்னிட்டு மோசம்போய் மானமிழக்க வேண்டும்! ஆதலால் ஒன்றுக்கும் நீ அவசரப்படாமல், உன் மனதைமட்டும் கைவிட்டு விடாமல் இழுத்துப் பிடித்துக்கொள். உலகத்தின் வாய் பொல்லாதது; சும்மா இருக்கிறவர்களையே சந்திக்கு இழுத்துவிடும்! அதற்கு கொஞ்சம் இடமும் கொடுத்துவிட்டால் வெறுவாயை மெல்லுகிறவனுக்கு அவலகப்பட்டது போலத்தான்! தேகத்தில் ரத்தமென்பது பொல்லாதது! அதன் திமிர் அடங்குகிறவரையில் அதை அடக்கியே ஆளவேண்டும். குழந்தாய்!

உத்பலா:—உன் வார்த்தைகளை எல்லாம் என் மனதிற்குக் காவலாளர்களாக வைத்துக்கொண்டிருக்கிறேன். ஆனாலும் நானும் ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேளண்ணா, புருஷர்களெல்லாம் விசேஷமாய் பிறர்க்கு புத்தி சொல்லுகிறார்கள்; சில சமயங்களில் அவர்களுபதேசம் அவர்களுக்கே பலிக்கிறதில்லை. நான் உனக்குப் புத்திசொல்லத்தகாதவளாதலால், உன் உபதேசத்தை நீயும் கொஞ்சம் மறவாமல் அனுஷ்டிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்! ஸ்திரிகளுக்கெப்பொழுதும் தங்களைக் காத்துகொள்ளவேண்டிய கடமை ஏற்பட்டிருக்கிறது. புருஷர்களுக்குத்தான் அப்படிப்பட்ட கடமையிருக்கிறதாகத் தெரியவில்லை, அல்லது கடமையிருந்தும் அதைக் கைவிட்டுவிட்டார்களோ என்னவோ!

லக்ஷ்மண:—அப்படியெல்லாம் சந்தேகப்படாதே, உத்பலா! நேரமாகிறது, நான் போய் வருகிறேன்; அதோ அப்பாவும் வந்துவிட்டார். (புலஸ்தியவர்மா வருகிறான்) இரண்டுதரம் ஆசீர்வாதம் பெற்றால் இரட்டிப்பு க்ஷேமம், இன்னொருதரம் உத்தரவு கேட்டுக்கொள்ளுகிறேனப்பா!

புலஸ்தி:—இன்னுமிங்கே தாமதிக்கிறாயா, ஏனடா லக்ஷ்மணா! அடே பயித்தியக்காரா, வண்டி காத்துக்கொண்டிருக்கிறதே உனக்காக! நல்லது! இந்த இரண்டொரு வார்த்தைமட்டும் ஞாபகமிருக்கட்டும்:—உன் நடவடிக்கைகளில் ஜாக்கிரதையாயிருந்துகொள். மனதில் உள்ளதெல்லாவற்றையும் எல்லாரிடத்திலும் வெளியிடாதே. ஒன்றையும் நீரயோசிக்காமல் செய்யாதே. எல்லாரிடத்திலும் சிநேகமாயிரு; அதற்காகக் கண்டவர்களிடத்திலெல்லாம் பல்லையிளித்துக்கொண்டு உன் கௌரவத்தை இழந்துவிடாதே. சலித்துப் பொறுக்கி எடுத்த சிநேகிதர்களிடத்தில் மட்டும் அந்தரங்கமாயிரு! முதல் முதல் கண்டு சலாம்செய்து கைகோர்த்த உடனேயே ஒருவனை அந்தரங்க சிநேகிதனாக பாவிக்காதே. சண்டைக்கே போகாதே! அப்படிப்போக நேர்ந்தால் எதிரிக்கு உன்னிடத்தில் அச்சமிருக்கும்படி நடந்துகொள். எல்லார் சொல்வதையும் கேட்டுக்கொள்—உன் சொந்த அபிப்பிராயத்தைமட்டும் அவ்வளவு எளிதிலாவது அல்லது பிடிவாதத்தோடாவது வெளியிடாதே! பிடிவாதமெல்லாம் வார்த்தையில் வேண்டாம், நடத்தையிலிருக்கட்டும். உயர்ந்த உடுப்புகளாகவும் சுத்தமானதாகவும் போட்டுக்கொள். ஆனால் நாலுபேர் உற்றுப்பார்க்கும்படியான உடுப்புகளைப் போடாதே. ஒருவனுடைய உடையைக்கொண்டே விசேஷமாய் அவனுடைய மாதிரியை அறிந்துவிடலாம். டில்லியில் இருப்பவர்களெல்லாம் உடுப்பு விஷயத்தில் வெகு ஜாக்கிரதையாயிருப்பார்கள். கடனும் வாங்காதே, கடனும் கொடுக்காதே. கடன் வாங்கினவன் உருப்படமாட்டான்—கடன் கொடுத்தால், பணத்துக்குப் பணமும்

போய் சிநேகத்துக்கு சிநேகமும்கெட்டு மனஸ்தாபமுண்டாகும். எல்லாவற்றிலும் முக்கியமாக உன்மனதறிந்து பிசகு வழியில் போகாதே! அப்படியிருந்தால்தான் உனக்கும் நலம், பிறருக்கும் கெடுதியில்லை. பாடங்களை சிரத்தையாய் அப்பியசித்துவா! கடவுள் உன்னை ஆசிர்வதிப்பார்!

லக்ஷ்மண:—அநேக நமஸ்காரம்! உத்திரவுகொடுங்கள்!

புலஸ்தி:—நேரமாகிறது, வேலைக்காரர்கள் எல்லாம் உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார்கள்.

லக்ஷ்மண:—உத்பலா, நான் சொன்னதெல்லாம் ஞாபகமிருக்கட்டும்!

உத்பலா:—எல்லாம் என் ஞாபகத்தில் பூட்டி வைத்திருக்கிறேன்! இதோ சாவியையும் உன்னிடத்திலேயே ஒப்புவித்திருக்கிறேன்.

லக்ஷ்மண:—போய் வருகிறேன் (என்று போய்விடுகிறான்.)

புலஸ்தி:—உன்னிடத்தில் என்ன சொன்னான், உத்பலா?

உத்பலா:—ஒன்றுமில்லை, யுவராஜாவைப் பற்றி என்னவோ சொன்னான்.

புலஸ்தி:—நல்ல வேளையாய் ஞாபகப்படுத்தினாயே! அவர் இப்பொழுது உன்னிடம் அடிக்கடி வந்து பேசுகிறதாகக் கேள்விப்படுகிறேன்! நீயும் அவருக்கு யாதொரு தடையும் சொல்லாமல் அவரோடு தாராளமாகப் பேசுவதாகத் தெரியவருகிறது. இது என் கௌரவத்துக்கும் என் புத்திரியாகிய உன் கௌரவத்துக்கும் அவ்வளவு உசிதமல்லவென்று நான் உனக்கு முன்ஜாக்கிரதையாகச் சொல்லுகிறேன். உங்களுக்குள்ளிருக்கும் உண்மையைச்சொல்!

உத்பலா:—அவர் அன்பெல்லாம் என்னிடத்திலேயே குடிகொண்டிருப்பதாக அடிக்கடி எழுத்து மூலமாகவும் நேரிலேயும் சொல்லிக்கொண்டுவருகிறார்.

புலஸ்தி:—சே! அன்பாம், குடிகொண்டிருக்கிறதாம்! நீ என்ன பச்சைக்குழந்தை மாதிரி பேசுகிறாயே! இதெல்லாம் நிசமென்று நம்புகிறாயா என்ன?

உத்பலா:—இதைப்பற்றி என்ன நினைக்கிறதென்று தெரியவில்லை, சுவாமி!

புலஸ்தி:—நீ ஒன்றும் நினைக்கத்தெரியாத குழந்தையென்று நினைத்துக்கொள்! அதே மாதிரி நடந்துகொள்! இனிமேல் அவர் ஏதாவது குடிகொண்டிருக்கிறதாகச்சொன்னால், "உங்கள் குடி உங்களோடிருக்கட்டும் எனக்கு வேண்டா"மென்று சொல்; இல்லாவிட்டால் நீயும் குடிமயக்கத்திலகப்பட்டுப் போவாய், நம் குடியும் கெட்டுவிடும்,—இதற்கு எத்தனை குடி! ஒன்று, இரண்டு, மூன்று—சே! நாலாகிவிட்டது!

உத்பலா:—சுவாமி! அவர் மரியாதையாய் எவ்வளவு சொல்லலாமோ அவ்வளவுதான் சொன்னாரேயொழிய மிதமிஞ்சி ஒன்றும் சொல்லவில்லை!

புலஸ்தி:—மரியாதைக்கென்ன குறைவு! போ, போ பைத்தியமே!

உத்பலா:—எல்லா தேவதைகள் முன்பாகவும் தான் சொல்வதெல்லாம் உண்மையென்று சத்தியம் செய்கிறாரப்பா!

புலஸ்தி:—இதெல்லாம் குருவி பிடிக்கிறதற்கு வலையென்று அறிந்துகொள். யௌவனத்தின் தாயமானது வார்த்தை இன்னது சொல்லுகிறோமென்று தெரியாமல் எவ்வளவோ பிதற்றச்சொல்லும்! இதெல்லாம் கண்ணாடியில் தெரியும் சந்திரன்போல் கைக்கெட்டாதவை. இனிமேல் நீ அவரோடு அவ்வளவு தாராளமாயிராதே! உன்னோடு அவசியமாய்ப் பேசவேண்டிய விஷயமிருந்தாலொழிய அவரை உன்னிடத்திற்கு வரவொட்டாதே! அவர் சிறுபிள்ளை; இனி பெரிய அந்தஸ்துக்கு வரப்பட்டவர். அவருக்கும் நமக்கும் வெகுதூரம். அவர் சொல்வதொன்றையும் நீ நம்பாதே. இதெல்லாம் குடியைக் கெடுக்கிற பேச்சுகள்! ஆதலால் இனி நீ அவரோடு அதிகமாகப் பழக்கம் வைத்துக் கொள்ளாதே! ஜாக்கிரதை! போ!

உத்பலா:—இனி தங்கள் சொல்படி செய்கிறேன், சுவாமி!

(எல்லோரும் போய்விடுகிறார்கள்.)

காக்ஷி-4.

இடம் :—அரண்மனை வாசல் தாழ்வாரம்.

காலம் :—இரவு மூன்றாவது ஜாமம்.

(ஹேமசந்திரலிங், ஹரிராஜலிங், மார்க்க சேனன், மூவரும் வருகிறார்கள்)

ஹேமசந் :—அதிக குளிராகவில்லையா இப்பொழுது ?

ஹரிரா :—ஆம், காற்று வெகு சிதளமாகத் தானடிக்கிறது.

ஹேமசந் :—இப்பொழுது அஸ்தமித்து எவ்வளவு நேரமிருக்கும் ?

ஹரிரா:—இரண்டாவதுஜாமம் அடிக்கிற சமயமாயிருக்கும்.

மார்க்க :—இல்லை. அடித்தாகிவிட்டது.

ஹரிரா :—அப்படியா! எனக்கு காது கேட்கவில்லையே ! அப்படியானல் அவ்வுருவம் தோன்றுகிறநேரம் வந்துவிட்டாற்போலிருக்கிறதே !

(வாத்திய கோஷமும், பீரங்கி வெடிகளும் கேட்கின்றன) இதென்ன இரைச்சல் கேட்கின்றதே, இனனதென்று தெரியவில்லை.

ஹேமசந் :—ராஜா அவர்கள் தனது இஷ்டமித்திர பந்துக்களுக்கு விருந்தளித்து, வாத்திய கோஷங்களுடன் மதுபானம் நடத்துகிறார்.

ஹரிரா :—இது எப்பொழுதும் வழக்கமா? இன்றைக்குமட்டும் புதிதா ?

ஹேமசந் :—மன்மதனுடைய உத்சவகாலமாகிற இம்மாதத்தில இம்மாதிரி வழக்கங்கள் உண்டென்று சொலலுகிறார்கள். ஆனல் எனக்குத் தெரிந்தவரையில் இந்த உயர்ந்த சம்பிரதாயம் இத்தனைநாளாய் அதிக அநுஷ்டானத்துக்கு வராமல் மழுங்கிப்போயிருந்தது ! இப்பொழுதுதான் நமது ராஜா அவர்களுடைய பிரயத்தினத்தினல் தலையெடுத்து நம்மை நாமே ஸ்தோத்திரம் செய்துகொள்ளும்படிக்கும், பிறர் நம்மை அவமதிக்கும்படிக்கும் ஏற்பட்டிருக்கிறது ! ஒரு லாபமென்னவென்றால் புலியைப் பார்த்துப் பூனை சூடிட்டுக் கொண்டதுபோல, அரைவயிறு அன்னத்துக்கு வழியில்லாதவர்களெல்லாம் சீமைச்சாராயம குடிக்கக் கற்றுக்கொண்டுவிட்டார்கள்—பிராமணர்கள்கூட இந்த அப்பியாசத்தைக் கொஞ்சம் ரகஸியமாய் அனுஷ்டித்துவர ஆரம்பிக்கிறார்கள் என்றால் அவர்களுடைய சிஷ்யர்களாகிய சாமான்ய ஜனங்களுக்குக் கேட்பானேன் ! பெரியோருடைய நல்ல குணங்களைக் கற்றுக்கொள்ளுகிறது வெகு கடினமாயிருக்கிறது! அவர்களுடைய கெட்ட குணங்களைக் கற்றுக்கொண்டுவிட்டால் நாமும் பெரியோர்களாகக் கொண்டாடப்படுவோமென்கிற எண்ணம் சாமான்ய ஜனங்களுக்கு உண்டாகி வருகிறது ! அவைகளை கற்றுக்கொள்கிறதும் சுலபமாயிருக்கிறது !—

ஹரிரா :—அதோ வருகிறது பாருங்கள் !

(பிதிரு தேவதை வருகிறது)

ஹேமசந் :—சகல தேவதைகளும் நம்மைக் காப்பாற்றட்டும்! நீ நல்ல தேவதையோ, துர்த்தேவதையோ, பூதமோ, பிசாசோ, சுவர்க்கத்திலிருந்துவருகிறாயோ, நரகத்திலிருந்து வருகிறாயோ எனக்குத் தெரியவில்லை; எப்படியிருந்தபோதிலும், யாராயிருந்தபோதிலும், என் பிதா ரூபமாக வந்திருக்கிற உன்னை பிதாவாகவே பாவித்துக் கேட்கிறேன்; நீ இங்குவந்த காரணமென்னவென்று சொல்; உனக்கு திருப்திசெய்யக்கூடிய விஷயம் ஏதாவது செய்யப்படாமல் குறைவாகவிருக்கிறதா? பிதிருக்கிரியைகளில் ஏதாவது குற்றம் நடந்ததா ? அல்லது மறுபடியும் இந்த மண்ணையும் மரத்தையும் வானத்தையும் நிலவையும் பார்க்க ஆசையாயிருந்ததா ? நான் ஒன்றுந்தோன்றாது பிரமிக்கிறேன் ! பதில் தெரியவேண்டும்.

(தேவதை ஹேமசந்திரனை ஜாடையினல் அழைக்கிறது)

ஹரிரா :—அது உங்களிடத்தில் தனியாக ஏதோ ரகஸியம் சொல்லக் கூப்பிடுவதுபோலிருக்கிறது !

மார்க்க :—அது எவ்வளவு அழகாயும் மரியாதையாயும் அழைக்கிறது ! ஆனலும் தாங்கள் அதை நம்பிப் போகாதேயுங்கள் !

ஹேமசந் :—போனலென்ன ; அது என்ன செய்துவிடப்போகிறது ! இந்த உயிரை நான் துரும்புக்கு மேலாக மதிக்கவில்லை ! அழிவில்லாத எனதாத்மாவை அது ஒன்றும் செய்யமுடியாது ! பயமென்ன ? அது என்னை மறுபடி கூப்பிடுகிறது, இதோ போகிறேன்!

மார்க்க :—அது ஒரு துர்த்தேவதையாகவிருந்து தங்களை எங்கேயாவது காடுமேடெல்லாம் வஞ்சித்தழைத்துக்கொண்டுபோய், எங்கேயாவது சமுத்திரத்தில் தள்ளியாவது கழுத்தை முறித்தாவது கொன்றுவிட்டால் நாங்கள் என்ன செய்வோம்? இந்தத் தடவை மட்டும் நான் சொல்வதைக் கேளுங்கள்! (என்று ஹேமசந்திரனைக் கையைப்பிடித்துத் தடுக்கிறான்.)

ஹேமசந் :—(கையை உதறிக்கொண்டு) என்னைத் தொடாதே, விட்டுவிடு, என் தேகத்திலுள்ள ஒவ்வொரு ரோமமும் போ, போ என்று என்னைக் குத்துவதுபோலிருக்கிறது! கையை விட்டுவிடு, இல்லாவிட்டால் உன்னைக் கூட பலியிட்டுவிடுவேன்!—அதோ என்னை இன்னும் கூப்பிடுகிறது!

ஹரிரா :—நீங்கள் போங்கள்! ஆனால் இந்த வார்த்தையைமட்டும் கேட்டுப்போங்கள்-அதனுடன் பேசும்போதெல்லாம் அதைப் பூதமாக நினைக்காமல், தங்கள் பிதாவாகவே பாவித்து, அவருயிருடனிருக்குங் காலத்தில் பேசியதுபோலவே பேசுங்கள்! நானும் கூட இருப்பதாக பாவித்துக்கொள்ளுங்கள்! இல்லாவிட்டால் நானும் தங்களுடன் வருகிறேன்!

ஹேமசந் :—வேண்டியதில்லை! அது என்னைத் தனியாக வரச்சொல்லித்தான் கூப்பிடுகிறது (என்று தேவதையுடன் போய்விடுகிறான்)

ஹரிரா :—அவர் வெகு ஆதுரமாயிருக்கிறார்! பயப்படவுமில்லை.

மார்க்க :—நாம் அவரை இப்படி விட்டுவிடுவது சரியல்ல! நாமும் கூடப் போகவேண்டியதுதான்!

ஹரிரா :—அதிக சமீபத்தில் போகாமல் கண்ணால் பார்க்கக்கூடிய தூரத்தில் நிற்போம்!

மார்க்க :—இவ்வளவு முரட்டுத்தனமாயிருக்கிறாரே! இதென்ன ஆகுமோ தெரியவில்லை.

ஹரிரா :—காலம் கெட்டுக்கிடக்கிறது! ராஜ்யத்திற்கு என்னவோ விபரீதம் விளையப்போகிறது!

மார்க்க —போவோம் வாருங்கள்.

(இருவரும் போய்விடுகிறார்கள்.)

(இன்னும் வரும்.)

———(*)———

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

(8-வது அதிகாரத்தொடர்ச்சி.)

தாசி வெகு அழகாயிருந்தபடியால் நாராயணசாஸ்திரிகள் வெங்கலக்ஷ்மி அம்மாள் இருக்கிறாளா என்று பார்ப்பார். அவள் இருந்துவிட்டால் தாசியைப் பார்த்ததற்கு அனர்த்தம் செய்துவிடுவாள். வெங்கலக்ஷ்மி அம்மாள் இல்லையென்று கண்டுகொண்டால் நாராயணசாஸ்திரிகள் கண்கொட்டாமல் பார்ப்பார். வித்வான்களுக்கு உத்ஸாகம் வரும்படிக்கு அவர்களுக்கு வாசித்தவுடனே ஏதாவது இனாம்தரவேண்டுமென்று சேஷய்யர் நாராயணசாஸ்திரிக்குச் சொன்னார். நாராயணசாஸ்திரிகள் தாங்கள் ஏதாவதுகொடுத்தால் போடுகிறேன் என்றார். சேஷய்யர் பிறகு சங்கீதத்தில் தியாகத்துக்காக அவரிடம் நூறுரூபாய் கொடுத்தார். அவர் அதை வாங்கிக்கொண்டு ஒருநாள் நாகசுரக்காரனை வாசிக்கச்சொன்னார். அவன் வெகுநல்ல ராகங்களையெல்லாம் வாசித்தான். வாசிக்கும்போது இடை இடையே ஊதியைக் கீழே வைத்துவிட்டு மத்தளத்தை அடிக்கச்சொன்னான். நாராயணசாஸ்திரிகள் நாகசுரக்காரன் உபயோகம் இல்லை இடைவிடாமல் ஊதத் தெரியவில்லையென்றார். பிறகு சங்கீதம் முடிகிறவரையில் யார் விடாமல் ஊதுகிறார்கள் என்று பார்த்தார். துத்தி ஊதுகிறவன் நிறுத்தவேயில்லை. கடைசியில் அவனைக் கூப்பிட்டு நாராயணசாஸ்திரிகள் 50-ரூபாய் இனாம் கொடுத்தார். நாகசுரக்காரனுக்கு கோபம் வந்துவிட்டது. அப்போதே ஊருக்குப் போகிறேன் என்றான். பிறகு சேஷய்யர் அவனுக்கு நல்ல வார்த்தை சொல்லி அதுமுதல் தியாகம் கொடுப்பதை நிறுத்தினார். ஸங்கீத வித்வான்களுக்கும் நாராயணசாஸ்திரிகள் அறியாமல் சேஷய்யர் தனிக் கச்சேரிவைத்து அவர்களை உத்ஸாகப்படுத்தினார். இப்படி இருக்க வீணைவாசிக்கிறவர் ஒருநாள் வெகு சுவாரசியமாய் வாசித்துக்கொண்டிருக்கும்போது வடதேசத்திலிருந்து வந்த ஒரு பைராகி நாலுசுரக்குடுக்கைவைத்த ஒர் தம்பூரை வைத்துக்கொண்டு மீட்டிக்கொண்டிருந்தான். நாராயணசாஸ்திரிகள் அந்தக்கச்சேரிமுடிந்ததும் வீணைவித்வானுக்கு ஒரு சுரைக்குடுக்கைக்காக 10-ரூபாயும், பைராக்கிக்கு நாலு சுரைக்குடுக்கைக்காக ரூபா 40-ம் கொடுத்தார். அந்த வித்வானும் கோபித்துக்கொண்டபிறகு சேஷய்யர் அவருக்கும் சமாதானம் சொல்லி நிறுத்தினார். இப்படி ஸ்ரீனிவாசன்

கல்யாணம்சேஷய்யருக்கு 15,000-ரூபாயிலும் நாராயணசாஸ்திரிகளுக்கு ஒருபைசா செலவில்லாமலும் முடிந்தது. ஆனால் நாராயணசாஸ்திரிகளுக்கு அந்தக் கல்யாணத்தில் மகாதேவய்யர் பிள்ளை சுவீகரிக்கப்பட்டு பந்தலில் உட்கார்ந்திருப்பதைப் பார்க்கும்போதெல்லாம் வயிற்றைக்கொதிக்கும். கடைசியில் நாகசுரத்தோடு சம்மந்தி நாராயணசாஸ்திரிகளை சேஷய்யர் காமேசுவரய்யர் இருவர்களும் ஒருமைல்வரையில் வழி அனுப்பிக்கொடுக்கும்போது கூட நாராயணசாஸ்திரிகளுக்கு அந்தப்பையன் இடைஞ்சலாயிருக்கிறானே என்கிற விசாரம் போகவில்லை.

(அதிகாரம், 9-வது)

நாராயணசாஸ்திரிகளுக்கு குழந்தை இராமச்சந்திரன் ஓர் தாயாதிக்காரன்போல்தோன்றினானேயொழிய அந்தக் குழந்தை அந்தக் குடும்பத்துக்கு அதிசயமாதலால் அது சௌக்கியமாயிருந்து எல்லோரும் அந்த சந்தோஷத்தை அனுபவிக்கவேண்டுமென்று தோன்றவில்லை. இரவும் பகலும் அவருக்கு இராமச்சந்திரனை என்னசெய்யலாமென்ற யோசனையே அதிகமாயிருந்தது. அடிக்கடி யோஜித்துப்பார்த்தார். கடைசியில் முன்னாடி சேஷய்யரைப் பிரித்து வைக்க ஏற்பாடு செய்யவேண்டும். அப்படி அதில் அவர் சரியாகவராவிட்டால் பிறகு ராமச்சந்திரனை தொலைக்க வழிதேடலாமென்று யோசித்தார். சேஷய்யருக்கு அடிக்கடி தன் ஊருக்குவரும்படி கடிதம் எழுதினார். ஆனால் தங்கத்துக்கு கிரகப்பிரவேசம் செய்யாமல் சேஷய்யர் வரக்கூடவில்லை. நாராயணசாஸ்திரிகள் இதனால் தன் யோஜனையே கெட்டுப்போவதை உத்தேசித்து தங்கத்துக்கு கிரகப்பிரவேசம் செய்வதாகத் தீர்மானித்தார். உடனே அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் செய்யப்பட்டன. சேஷய்யர் வெகு ஆடம்பரத்துடன் கிரகப்பிரவேசத்துக்குப் போயிருந்து சீர்வரிசைகள் ஏராளமாய்க் கொடுத்தார். கிரகப்பிரவேசமானபிறகு காமேசுவரய்யர் தங்கம் எல்லோரையும் கூட்டிக்கொண்டு ஊருக்குப்போய்விட்டார், சேஷய்யர்மட்டும் கொஞ்சநாள் அங்கேயே இருந்தார். நாராயணசாஸ்திரிகள் அவருக்கு வெகு உபசாரமெல்லாம் செய்துவந்தார். இப்படி இருக்க,காமேசுவரய்யரிடமிருந்து ஜானகியம்மாளுக்கு உடம்பு சரியாகவில்லையென்று கடிதம் வந்தது. சேஷய்யர் உடனே ஊருக்குப்போய்விட்டார். ஆறுமாதத்திற்குப்பிறகு ஜானகி அம்மாளுக்கு உடம்பு சரியாக இருப்பதாகத் தெரிந்து நாராயணசாஸ்திரிகள் மறுபடியும் சேஷய்யரை வரும்படி கடிதம் எழுதினார். சேஷய்யர்க் அந்த கடிதத்தைப் பார்த்த பிறகு கமலாவடி கிராமத்துக்குத் தன் மாப்பிள்ளையைப் பார்ப்பதற்குப் போவதாக காமேசுவரய்யரிடம் சொல்லிப் புறப்பட்டுவந்தார். இவர் போன சமயத்திக்கும் மாப்பிள்ளை மெட்ரிகுலேஷன் பரிக்ஷை தேறினான் என்ற சமாசாரம் வருவதற்கும் சரியாக இருந்தது. சேஷய்யருக்கு மாப்பிள்ளை பரிக்ஷை தேறினதில் வெகு சந்தோஷம். பிறகு சேஷய்யர் அங்கேயே ஒருமாதம் இருந்தார். இவருக்கு நாராயணசாஸ்திரிகள் தினந்தோறும் வெகு உபசாரம் செய்து வந்தார். சேஷய்யர் கொஞ்சம் ஸ்தோத்திரப்பிரியர். சம்பந்தி இப்படி உபசாரம் செய்யச்செய்ய அவர்பேரில் பிரியம் அதிகரித்தது. ஒருநாள் இருவரும் நாராயணசாஸ்திரிகள் தோட்டத்துக்குப் போயிருந்தார்கள். அங்கே நாராயணசாஸ்திரிகள் சில பழவகைகள் தருவித்து சம்பந்திக்குக் கொடுத்து தாகத்துக்கு இளநீர் பிடுங்கிப்போடச்சொன்னார். சேஷய்யர் இந்த சந்தோஷத்தில் தமாஷாய் நாராயணசாஸ்திரிகளிடத்தில் பேசத்துவக்கி "சாஸ்திரிகளே! ஆதியில் எதார்த்தமாக உங்கள்வீட்டு சம்பந்தம் எனக்கு இஷ்டமில்லை. என் பெண்ணை யாராவது உத்தியோகஸ்தன் வீட்டில் கொடுக்கவேண்டுமென்று இருந்தேன். அப்படியே ஒரு டிப்டிகலெக்ட்டர் பிள்ளைக்குப் பார்த்து ஜாதகத்தைக்கூட வாங்கிவந்தேன். அதற்குள் எங்கண்ணா காமேசுவரய்யருக்கு வெகுகோபம் வந்துவிட்டது. நான் அவரிடம் முதல் முதல் சொல்லவில்லையாம், அதற்காக கோபித்துக்கொண்டு தன்னிடம் கல்யாண பிரஸ்தாபமே எடுக்கவேண்டாமென்று சொல்லி எழுந்திருந்து போய்விட்டார். பிறகு அவருக்கு நல்லவார்த்தை சொல்வதற்குள் வெகு கஷ்டப்பட்டுப் போய்விட்டேன். அதன்பிறகு நான் அவரிஷ்டப்படியே விட்டுவிட்டேன். அவர் உங்கள்வீட்டு சம்பந்தந்தான் செய்யவேண்டுமென்று பிடிவாதம் செய்தார். நான் அவரை மீறி நடக்கக் கூடவில்லையென்றார். நாராயணசாஸ்திரிகளைத்தவிர வேறெவர் இதைக் கேட்டாலும் காமேசுவரய்யர் செய்தது தனக்கு அனுகூலமென்று அவரை சிலாகிப்பார்கள். ஆனால் கபடசிகாமணியாகிய நாராயணசாஸ்திரிகள் அப்படிச் செய்யவில்லை. உடனே தன் கெட்ட எண்ணத்தை சேஷய்யருக்கும் போதிக்க ஆரம்பித்தார்.

நாராயணசாஸ்திரி:—சேஷய்யரவாள் நான் இதுவரையில் தங்களிடம் உள்ள சங்கதியைச்சொல்ல சங்கோசப்பட்டுக் கொண்டிருந்தேன். நான் உங்கள் குடும்பத்தில் அதிகமாய்ப் பழகாவிட்டாலும கல்யாணத்தின்போது பார்த்தமட்டில் காமேசுவரய்யருக்கு உங்களிடம் மதிப்பே இல்லையென்று தோன்றிற்று. தாங்கள் இன்றைக்கு பிரஸ்தாபித்ததால் எனக்கும் அது விஷயம் ஞியாபகத்துக்கு வந்தது.

சேஷய்யர்:—மதிப்பு என்ன! அவர் தமையன் இல்லையா. அவர் என்னிடம் மதிப்பு வைப்பானேன். நான்தானே அவரிடம் மதிப்புவைத்து மரியாதையாக இருக்கவேண்டும்.

நாராயணசாஸ்திரி:—அய்யரவாள் தாங்கள் அவாளிடம் மரியாதை இல்லாமல் இருக்கவேணுமென்பது என் கருத்தல்ல. நானும் எங்கண்ணாவிடம் மரியாதையாகத்தான் இருக்கிறேன். அவரைக் கண்டால் உட்கார்ந்து இருக்ககூடமாட்டேன். ஆனால் எங்கண்ணா அதற்குத் தகுந்தாப்போல் என்னிடத்திலும் மரியாதையாய் இருப்பார். உங்கள் காமேசுவரய்யரைப்போல் இருக்கமாட்டார்.

சேஷய்யர் :—அதற்கென்ன! எங்கண்ணாவிடம் கொஞ்சம் பிடிவாதம் உண்டு. தான் பிடித்த பிடியைவிடமாட்டார்.

நாராயணசாஸ்திரி :—பிடிவாதமட்டுமா! என்னையா! கொஞ்சமாவது தம்பி என்கிற மரியாதை வேண்டாமா. நீங்கள் ஒரு நிச்சயம் செய்கிறது! ஒரு பெரிய மனுஷியனிடம் பேசிவிட்டு வருகிறது! அதை இவர் கொஞ்சங்கூட லக்ஷியம் செய்யாமல் அந்தப்பேச்சை யெடுக்கும்போதே எழுந்திருந்து போகிறதென்றால் இதைப்பார்க்க மனிதனுக்கு வேறே அவமானம் என்னவேண்டும்!

சேஷய்யர் :—அதற்கென்ன செய்கிறது. நான் அவருக்கு அவ்வளவு மரியாதை கொடுத்துவிட்டேன். அதை அவருக்குக் காப்பாற்றிக்கொள்ளத் தெரியவில்லை.

நாராயணசாஸ்திரி :—அதுதான் செய்தாரே, கலியாணத்தின்போது வாதெக்ஷணைக்கு நீங்கள் அவ்வளவு ஆக்ஷேபனை செய்தீர்களே இவர் தங்களைத் தனித்து யோஜிக்கவேண்டாமா. வெங்கிடராம சாஸ்திரிகளைக் கூட்டிக்கொண்டுபோய் என்னவோ தனியாக யோஜனை செய்தார். நான்கூட அதெல்லாம் பார்த்துவிட்டு உங்களுக்கும் உங்கள் தமையனுக்கும் எதாவது மனஸ்தாபமோ என்று யோஜித்தேன்.

சேஷய்யர் :—அவர் முன்போலில்லை. இப்போது ஒரு மாதிரியாய்த்தான் இருக்கிறார் - காரணம் தெரியவில்லை.

நாராயணசாஸ்திரி :—நான் கேள்விப்பட்டது என்னவென்றால் நீங்கள் எதோ கடன்வாங்கி மச்சு வீடுகட்ட ஆரம்பித்தீர்களாம். அது அவருக்கு சம்மதமில்லையாம், அந்தக்கடனை நீங்களே பொறுத்துக் கொள்ளவேணுமென்று சொல்லியிருக்கிறாராம்.

சேஷய்யர் :—ஒருபோதும் நான் பொறுத்துக் கொள்ளமாட்டேன். இவர்மட்டும் வீடுகட்டவில்லையோ, அந்தக் கடனை யார் தலையில் போடுகிறது.

நாராயணசாஸ்திரி :—ஆமாம். கல்லியாணத்தின்போது சிவந்த நிறமாய் உயரமான ஒருவரை தனிமையாய் கூப்பிட்டு அவருக்கு 200ரூபாய் நோட்டுக்கொடுத்தாரே அவர் யாரையா.

சேஷய்யர் :—சிவந்த நிறமா! உயரமா! அப்படியானால் அவர் மைத்துனராகத்தான் இருக்கவேண்டும். 200. ரூபாயா கொடுத்தார்.

நாராயணசாஸ்திரி :—அதுவும் நோட்டாகக்கொடுத்தார். நான் என்னத்தைக் கண்டேன். அப்போது அந்த சமயத்தில் அவ்வழியாகப்போனேன். 200-என்று காதில் பட்டது. அவர் நோட்டை வாங்கிக்கொண்டார் - பார்த்தேன். கல்லியாணச் செலவு என்ன பார்த்தீர்களா?

சேஷய்யர் :—பதினையாயிரம் ஆயிற்று என்று சொன்னார். ஆனால் எனக்குக் கொஞ்சம் சந்தேகம் உண்டு. இப்போது நீங்கள் சொன்னபிறகு தெரிகிறது.

நாராயணசாஸ்திரி:—கல்லியாணத்தில், 15,000-ரூபாய்க்கு என்ன செலவு இருக்கப்போகிறது. தாங்கள் கணக்குகளை விவரமாகப் பார்க்கவில்லையோ.

சேஷய்யர் :—அதையெல்லாம் எங்கே காண்பிக்கிறார். கணக்குக்கேட்டால் என்பேரில் சந்தேகமா என்று சண்டைக்கு வருகிறார்.

நாராயணசாஸ்திரி :—என்னையா சமபாகஸ்தரை இப்படித்தானா அவமரியாதையாய் வைக்கிறது. ஆகிலும் இனி நீங்கள் இப்படி இருக்கக்கூடாது. வருகிற விரோதம் வருகிறது. கணக்கு வழக்குகள் ஜாக்கிரதையாய்ப் பார்க்கவேண்டும். எனக்கு எத்தனையோ குடும்பங்கள் தெரியும். எல்லா இடங்களிலும் அண்ணன்மார் தம்பிகளை இப்படித்தான் ஏமாற்றியிருக்கின்றார்கள்.

சேஷய்யர் :—இனி ஊருக்குப்போய் கணக்குகளை ஜாக்கிரதையாய்ப்பார்க்கிறேன்-

நாராயணசாஸ்திரி :—என் பணம் அவர்மட்டும் வைத்து செலவு செய்யவேனேன்? தாங்கள்மட்டும் என்ன சிறு குழந்தையா! தங்களிடம் தான் பணத்தைக்கொடுத்து செலவுசெய்யச் சொல்லட்டுமே. நல்லது! கல்லியாணத்தின்போது பாண்டு எழுதிக் கொடுத்திருக்கிறீர்களே. அது கணக்கில் போட்டிருக்கிறீர்களா.

சேஷய்யர் :—அது கணக்குக்கு வரவில்லையென்று சொன்னார்.

நாராயணசாஸ்திரி :—என்னையா தந்திரம். இந்த தந்திரமெல்லாம் தங்களுக்குத் தெரியவில்லையே. அந்தப்பணம் கொடுபடாதிருந்தால் அதை பண்ணை கணக்கில் கொண்டுவராமல் தங்கள் கணக்கில் போடலாமென்றல்லவா இருக்கிறார்.

சேஷய்யர் :—அதற்கு நாமென்ன செய்யலாம். நீங்கள்தான் சொல்லவேண்டும்.

நாராயண்சாஸ்திரி :—அதற்கென்ன நீங்கள் இவ்விடத்திலேயே நாட்டுக் கோட்டையானிடத்தில் வாங்கி ரூபாயை எனக்குக் கொடுத்துவிடுங்கள். அப்போது அவர் சால்ஜாப்பு சொல்லமுடியாது. அந்தப் பணத்தை குடும்ப கணக்கில்தான் கொண்டுவரவேண்டும். இப்படி சேஷய்யர் மனது கலையவே நாராயணசாஸ்திரிகள் தன் காரியம் அனேகமாகத் தீர்ந்தது என்று எண்ணிக்கொண்டு சேஷய்யருக்கு முன்னைவிட அதிகமாக உபசாரம்செய்ய ஆரம்பித்தார். உடனே வெங்கிடராமசாஸ்திரிகளையும் வரும்படி கடிதம் எழுதினார். அவர் வருவதற்குள் நாராயணசாஸ்திரிகள் சேஷய்யரைக்கொண்டு நாட்டுக்கோட்டையானுக்கு பாண்டு எழுதிக்கொடுக்கும்படிசெய்து கல்லியாணத்தில் பேசின 2500ரூபாயையும் பற்றிக்கொண்டார். நாராயணசாஸ்திரிகளுக்கு தன் காரியம் இரண்டுவிதத்தில் பலித்தது. முதலாவது பணம்வருவது சிரமம். காமேசுவரய்யர் சாமானியமாகக் கொடுக்கமாட்டார். அதற்காக சேஷய்யரைத்தூண்டி பணத்தைப் பற்றிக்கொண்டார். மேலும் இதன் மூலமாக சேஷய்யருக்கும்

காமேசுவரய்யருக்கும் விரோதம் வருமென்பது நாராயணசாஸ்திரிகளுக்கு நிச்சயம். இப்படியிருக்க வெங்கிடராமசாஸ்திரிகளும் கடிதம் போனவுடனே தாமதம்செய்யாமல் புறப்பட்டுவந்தார். அவர் வந்து சேர்ந்ததும் நாராயணசாஸ்திரிகளும் அவரும் தனியாகக்கலந்து கொண்டார்கள். பிறகு ஒரு நாள் மூன்றுபேரும் தோட்டத்துக்குப் போனார்கள். அங்கே வெங்கிடராமசாஸ்திரிகள் தன் வீதத்துக்கு நாராயணசாஸ்திரிகள் வேண்டுகோளின்படி சேஷய்யர் மனதைக் கலவரம்செய்ய ஆரம்பித்தார்.

வெங்கிடராமசாஸ்திரிகள்:—என்ன அண்ணா நீங்கள் வந்து நாளாச்சுதாமே. சீக்கிரம் திரும்பிவரவில்லை—குடும்ப விசாரமே உங்களுக்குக் கிடையாது என்று அங்கே காமேசுவரய்யர் புகார் செய்கிறாரே! என்றார்.

நாராயணசாஸ்திரிகள்:—ஓகோ இது வேறே புகாரா! சம்மந்தி அய்யரவாளே! நான் சொன்னது எப்படி நடக்கிறது பார்த்துக்கொள்ளுங்கள்.

சேஷய்யர்:—என் அவர் ஒருவர் குடும்பத்தில் பொறுப்பாய் இருப்பது போதாதா! நல்லது வெங்கிடராமசாஸ்திரிகளே! உம்மிடம் அண்ணா கல்லியாணச்செலவு என்ன ஆச்சுது என்று சொன்னார்.

வெங்கிடராமசாஸ்திரிகள்:—அவர் சொல்வானேன் எனக்குத் தெரியாதா? செலவுகளெல்லாம் பதினாயிரம் ரூபாய்க்குமேல் ஒரு பைசாகூட ஆகவில்லை. ஒவ்வொரு செலவும் எனக்கு நன்றாய்த் தெரியும்.

நாராயணசாஸ்திரிகள்:—சம்பந்தி அய்யரவாளே நான் சொல்லவில்லையா! ஒரு குடும்பமாயிருக்கிற சுகம் பார்த்துக்கொள்ளுங்கள். நீங்கள் பொறுப்பில்லை பொறுப்பில்லையென்று உங்கள் பேரில் பழி போடுகிறது. பொறுப்பு இருக்கிறவர் ஐயாயிரம் ரூபாய் ஒளித்துக்கொண்டு தனியாக லாவாதேவி செய்கிறது.

வெங்கிடராமசாஸ்திரிகள்:—மாப்பிள்ளை! நீரும் நானும் சொல்லி என்னசெய்கிறது. அவாள் அண்ணன் தம்பிகள் எப்படி இருந்தாலும் இருக்கலாம். நாம் அதைச் சொல்லலாமா! ஆனாலும் இப்படிப் பட்ட அக்கிரமம் எங்கேயும் பார்த்ததில்லை. சேஷய்யர் பங்களாவில் சுகமாய் இருக்கிறார். அவருக்கு என்ன தெரிகிறது! சேஷய்யர் பெண்ணுக்கு கல்யாணத்தின்போது தானே நகை செய்தார்கள். அதற்குமுன் ஒன்றுமில்லையே. மகாதேவய்யர் பிள்ளையைப் போய்ப்பாரும். இடுப்பில் தங்க அரைஞாண், கழுத்தில் கொவ்வைகட்டியருத்திராக்ஷம் கொடியோடு தொங்குகிறது. நல்ல வைரக்கடுக்கன் காதில் போட்டப்பட்டிருக்கிறது. சகலமான நகைகளும் காமேசுவரய்யர் பண்ணிப்போட்டிருக்கிறார். மேலும் வாசலில் வந்த பண்டங்கள் ஒன்றும் பாக்கியில்லை. எல்லாம் வாங்கிக் கொடுக்கிறார். சேஷய்யர் சம்சாரத்தையும் பாரும் காமேசுவரய்யர் சம்சாரத்தையும் பாரும். காமேசுவரய்யர் சம்சாரத்தின் தேகத்தில் இருக்கிற நகையின் விலையில் பத்தில் ஒருபங்கு சேஷய்யர் சம்சாரத்தின் தேகத்தில் இருக்குமா, இராது! கலியாணத்தின்போது அவர் மைத்துனருக்கு 200-ரூபாய் நோட்டுக் கொடுத்தது உங்களுக்குத் தெரியுமா.

சேஷய்யருக்கு இதைக் கேட்க அரைகுறையாய் இருந்த சந்தேகமும் நீங்கிற்று. வெங்கிடராமசாஸ்திரிகளும் காமேசுவரய்யர் மைத்துனருக்கு 200-ரூபாய் கொடுத்ததைச் சொல்வானேன்! சேஷய்யர் கபடமற்றவராதலால் அவர்கள் இருவரும் பேசிக்கொண்டிருப்பார்கள் என்பதைநினைக்கவே இல்லை. எதார்த்தத்தில் காமேசுவரய்யர் மகாதேவ அய்யர் பிள்ளைக்கு ஒரு நகையாவது செய்துபோட்டது இல்லை. எல்லா நகைகளும் மகாதேவய்யர் பெண் சாதி தன் நகைகளை விற்று அதைக்கொண்டு செய்துபோட்டிருந்தாள். காமேசுவரய்யர் 200-ரூபாய் தன் மைத்துனருக்கு கொடுத்ததும் இல்லை. காமேசுவரய்யருக்குத் தன் மாமனாத்து மனுஷ்யரே ஒருவரும் ஆகாது. கல்லியாணத்தின்போது எதார்த்தத்தில் பதினையாயிரம் ரூபாய் செலவானது. சேஷய்யர் அந்தக் கணக்கைப் பாராதவராதலால் வெங்கிடராமசாஸ்திரிகளும் நாராயணசாஸ்திரிகளும் காமேசுவரய்யர்பேரில் கோள் சொல்லச் சொல்ல சேஷய்யருக்குத் தமையன்மீது கோபம் அதிகரித்தது. கடைசியில் இதுதான் சமயம் என்று கண்டு வெங்கிடராமசாஸ்திரிகள் "நல்லது சேஷய்யரே! கல்லியாணத்தின்போது 2500-ரூபாயிக்கு எழுதிக்கொடுத்த பாண்டுப்பணம் கொடுத்தாய்விட்டதா" என்றார். சேஷய்யர் அதை நான் இங்கே வாங்கிக் கொடுத்துவிட்டேன்.

வெங்கிடராமசாஸ்திரி:—நல்லது அதுதான்கேட்டேன். காமேசுவரய்யர் அது குடும்பத்தைச் சேர்ந்தது அல்லவென்றும் அது உம்ம சொந்தக் கணக்கென்றும் என்னிடம் சொன்னார்.

நாராயணசாஸ்திரி:—சம்பந்தி அய்யரவாளே நான் சொன்னது சரியாகப் போய்விட்டதா!

சேஷய்யர்:—சரிதான்! ஒன்றாய் இருக்கிற குடும்பத்தில் இப்படி இருப்பதால்தான் அனர்த்தம் வருகிறது.

இப்படி இருவரும் சேஷய்யர் மனதைக் கலைத்துக் கொண்டே சேஷய்யரை வெகு சுகமாய் வைத்திருந்தார்கள். நாராயணசாஸ்திரிகள் தினந்தோறும் சேஷய்யருக்கு எது வேண்டுமானாலும் வாங்கிக்கொடுப்பார். சில சமயங்களில் ஆள்கள் இல்லாமல்போனாலும் ஆள் இருப்பதுபோல பாசாங்கு பண்ணிக்கொண்டு தானே கடைக்குப்போய் சாமான்கள் வாங்கிவந்து, ஆள்கள் வாங்கிவந்ததுபோல் பாசாங்குசெய்வார். இப்படிக்கொஞ்ச நாள் இருந்து சேஷய்யர் ஊருக்குப்போய் உடனே பாகத்துக்கு ஏற்பாடுசெய்வதாகச் சொல்லி வெங்கிடராமசாஸ்திரிகளுடன் புறப்பட்டுப் போய்விட்டார்.

எஸ். இராமஸ்வாமி ஐயர், பி. ஏ.

(இன்னும் வரும்.)

## லலிதாம்பாள் சோபனம்.

(28-வது பக்கத்தொடர்ச்சி.)

17.

காரியமாயிந்த வார்த்தைகேட்டுவேடன்
கிராமந்தடாகந் தோப்பாலயங்கள்
பாரியாகச்செய்து பிராமணனுக்கெல்லாம்
பக்தியுடன்தானஞ்செய்திருந்தான்.
வேடன்வேடத்திக்குக் காலங்கள் சென்றபின்
விஷ்ணுபிர்மாசிவ எமதூதர்கள்தாம்
கூடிவந்திவர்களை அவரவர்லோகத்திற்குக்
கூட்டிப்போகவந்தார் சோபனம் சோபனம்.

18.

நாரதர்வந்திந்த தூதர்களுக்குச்சொல்வர்:
நாலுமூன்றுண்டிவர்க்குக் காற்றுருபம்;
திருடினபணத்துடையார்க்குத் தர்மமென்று
திருப்பினார் நாரதர் தூதர்களை!
பணத்திற்குடையவர்க்கு தெய்வகிருபையாலே
பாபங்கள்போய்ப் புண்யம் சித்தித்தது!
பணங்களுக்குடையவர் நல்லகதியடைந்தார்
பார்த்துக்கொள் இந்திரா சோபனம் சோப
[னம்.

19.

ஜனங்களைரக்ஷிக்கும் ராஜன் மாத்திரந்தான்
செய்யலாகுந் துஷ்டநிக்ரகங்கள்!
மனிதர்பசுயக்யந் தவறுதலாய்ச்செய்தால்
மாதேவி கோபித்து எரித்திடுவள்!
யுவனாச்வமகாராஜன் யஜ்ஞத்தில் தேவர்கள்
ஒருவர்க்கொருவர் முந்தச்சண்டையிட்டார்,
தேவர்க்கு பாகத்தைப் பிரித்துக்கொடுத்தார்
தயவாக பிர்மாவும் சோபனம் சோபனம்.

20.

ஸுராபானஞ்செய் பேர்க்கு நரகமுண்டு
சொட்டுக் கொரு வருஷக் கணக்காக!
பரதாரகமனத்தால் ஆயுஸு குறைந்திடும்
பாபம் ரோகம் நரகங்கள் உண்டு!
பரதார கமனத்தால் ராவணன் மாண்டான்
பாஞ்சாலியால் துரியோதனன் மாண்டான்
ஒருக்காலும் பரதார நினைவில்லாதவருக்கு
ஒருநாளும் அமடில்லை சோபனம் சோபனம்.

21.

பானம் பரதாரமும் முன் சொன்ன மூன்றுடன்
பஞ்சமா பாதகம் ஆகஐந்து
வனிதுகளை எல்லாம் உமக்குச்சொன்னேன் என்
இந்தப் பாபங்கள் உமக்குமுண்டு; [றால்
தீராதபாபங்கள்தீருந்தேவியுடைய
ஸ்ரீபஞ்சதசாக்ஷரி ஜபத்தாலே!
தீராத பாபத்தைச் செய்தாயே இந்திரா
சொல்லுவேன் உனக்கிப்போ சோபனம்சோப
[னம்.



22.

முன்னாலே தேவரும் நீயுந்தாதாபுத்ரன்
விச்வரூபனைப் புரோகிதராய்ச்
சொன்னபடிக்கு இருந்தான் உங்களுக்கு
துரோகமுஞ் செய்யவில்லை விச்வரூபன்
அஸுரானுக்கு மருமான் என்ற விரோதத்தால்
அனியாயமாயவனை நீ வதைத்தாய்!
விச்வரூபனுடைய வதத்தால் பிருஹ்மஹத்தி
விரட்டித்தன்னை யிந்திரா சோபனம் சோப
[னம்.

23.

அதுவும் போதாதபடிக்குத் தூர்வாஸரும்
இந்திராவுன்னை வேணது சபித்தார்—
இதுஎல்லாம் ஒருமிக்க பலனனுபவிப்பாய்
இக்ஷணம் நிமித்தங்கண்டு சொல்கிறேன் கேள்-
சோபை இல்லைபார் உன்னுலகத்தில் இந்திரா
சோறில்லாதவர்கள்போல் ஆனார்கள் தேவாள்
லோபிகள் ஆனார்கள் உலகத்து விப்பிரர்கள்
ரொம்ப உற்பாதங்கண்டேன் சோபனம் சோ
[பனம்.

24.

இப்படியாக இந்திரனுக்கு சுருவுங் கதைகளை
எல்லாஞ் சொல்லிக்கொண்டிருக்கும்போது
மப்புத்தட்டிக்கொண்டு அஸுரானுடனே
மலகனென்ற அஸுர ராஜனுந்தான்
அமராபதியை வளைந்து தேவர்களை
அடித்து வெளியிலே துரத்திவிட்டான்.
அமரானும் இந்திரனும் பிர்மாவிடத்தில்போய்
அஸுரன் ஜெயசேதியைச்சொன்னார்கள் சோ
[பனம் சோபனம்.

25.

சதுர்முகர் கேட்டிந்த அஸுரன் செய்தியெல்லாம்
தட்டுக்கெட்ட இந்திரனைப்பார்த்துரைப்பார்:—
இதற்கொன்றும் நம்மாலே ஆகாது இந்திரா
என்னாலே யாகும் உபாயஞ் சொல்வேன்:
அச்சுதரே ஜயம் தருவருங்களுக்கு
அவரிடம் போங்கள் என்றுருடனே
அச்சுதானந்தர் சமீபத்தில் அத்தனை
பேர்களும் வந்தார்கள் சோபனம் சோபனம்.

26.

சேஷசயனருடை சரணம்புஜங்களை
தெண்டனிட்டுஸ்தோத்திரங்கள் பண்ணி
கரசாம்பூ வர்ணரோடே தாங்கள் படுகின்ற
கஷ்டங்களைச்சொல்லி அறிவித்தார்கள்:
நாதரே உம்மிட தாஸர்களான
நாங்கள் படுகின்ற சங்கடங்கள்
எதறியாமல் இருக்கின்ற காரியம்
இந்த நித்தினாயுண்டோ! சோபனம் சோப
[னம்.

27.

மலகன் முதலான அஸுராளை வதைத்து
மாதவா இந்திரனை நிலையிலாக்கும்;
அலைகிறோமே நாங்கள் வேஷத்தைமறைத்து
அந்தக்குறைவு உமக்கில்லையோ!
கெருட்வாகனரும் அவர்களைப் பார்த்து
கெம்பீரமாய் ஒருவார்த்தை சொல்வர்:
ஒருக்காலும் உங்களுக்கு மரணமில்லாமலே
உபாயத்தைச் சொல்லுவேன் சோபனம் சோ
[பனம்.

28.

அங்கேபோய்ச் சொல்லுங்கள் அஸுராளுடனே
'அமிர்த பானஞ் செய்தோமானுக்கே,
உங்கட்கும் எங்கட்கும் சாவில்லை ஒருக்காலும்
எல்லோருமாயமிர்தங் கடைவோம்'
இப்படிச் சொல்லியே அஸுராளை எல்லாம்
இங்கே கூட்டிக்கொண்டு வாருங்கோள்
அப்போ அஸுராளுக்கு வேலைமாத்திரம் மிஞ்சும்
அமிர்தம் உங்களுக்குத்தான் சோபனம் சோப
[னம்

29.

பாற்கடலில் நான்கு ஔஷதிகளையும்
பறித்துக்கொண்டுவந்துபோடுங்கள்—
நிற்காமல்போய் மந்திரத்தை மத்தாகவும்
நீண்ட வாஸுகி கயிறாகவும்
வைத்துக்கொண்டு கடலைக் கடைந்தானால்
வரும் அதிலேயிருந்து அமிர்தகுடம்—
நிச்சயமாய் உங்களுக்குத்தான் அமிர்தம்
நீங்களே புஜிப்பீர்கள் சோபனம் சோபனம்

——()——

தேவர்களும் அஸுரர்களுங்கூடி அமிர்தங் கடைதல்.

30.

சாங்கியுடைய சம்மதத்தை எல்லாம்
சகல தேவாளும் அஸுராளுடன்
ஆங்காரமில்லாமல் போய்ச் சொன்னவுடனே
அந்தத் தானவர்கேட்டு உள்ளதென்றே—
சேர்ந்துகொண்டு அந்த தேவாளும் அஸுராளும்
க்ஷீராப்திக் கரையிலே கூடிவந்தார்கள்
சீக்கிரமே நான்கு ஔஷதிகளையும்
க்ஷீராப்தியில் போட்டார் சோபனம் சோப
[னம்

31.

மந்திரகிரியை மத்தாகவேகொண்டு
வாஸுகியைக் கயிறாகக்கொண்டு
தந்தியாய் வாஸுகியை மூன்று சுற்றாக்கி
தலைப்புறத்தை அஸுராளிழுத்தாள்—
வாஸுதேவரோடே ஆக்ஞையால் தேவர்கள்
வால்புறத்தைப் பிடித்திழுத்தார்கள்.
ஈசரும் பிரும்ம ரிஷியுங் கந்தர்வாளும்
இதுபார்க்கவந்தார்கள் சோபனம் சோபனம்—

32.

இழுக்கின்ற வேதனைபொறுக்காமல் வாஸுகி
எரிக்கும் விஷத்தையது கக்கியது
மழுப்போல எல்லோரையும் எறிக்கத்துவக்கியது
மதனத்தை விட்டோடத் துவக்கினார்கள்!
பக்தாளுக்காபத்தைத் தீர்க்கவேண்டுமென்றே
பரமேசரும் விஷத்தை விழுங்கிவிட்டார்.
ஸ்தோத்தரித்துபரமேசரைப் பின்னும்
துவக்கினார்கள் மதனத்தை சோபனம் சோப
[னம்.

33.

பாரிஜாதங்காமதேனுவும் ரத்னமும்
பிறந்து தேவேந்திரனிடஞ் சேர்ந்தது;
நாரியரும் வந்தாள் பாலசந்திரனும் வந்தான்
இந்திரனும் ஈசரும் அடைந்தார்கள்—
பின்னும் அனேகம் ரத்னங்களும் வந்திடப்
பிறகு அமிர்த கலசங்கொண்டு
தன்வந்திரி வந்தார் லக்ஷ்மீதேவி வந்தாள்
ஸ்வாமி விஷ்ணுவைச்சேர்ந்தாள் சோபனம்
[சோபனம்

——()——

மோஹினி அவதாரமாகி அஸுரரை மயக்கி அமிர்தம் பங்கிடல்—அரிஹரபுத்திரர் உற்பத்தி.

34.

வஞ்சக அஸுரரள் அமிர்த கலசத்தை
வந்து பறித்துக்கொண்டுபோனார்கள்.
என்னசெய்வோமென்றுதேவரும்போய்ப்பிடிக்க
இவருக்கும் அவர்களுக்கும் சண்டையாக,
லோகேசர் ஹரியிந்தச் சண்டையைக் கண்டு
லோகமாயையைத்யானித்தார் ஒருமுகூர்த்தம்;
மோகினிவேஷம் தரித்து அந்த அஸுரர்களை
மோகிப்பித்தாளம்மன் சோபனம் சோபனம்.

35.

சண்டை பிடிக்கின்றவர் நடுவிலே மோகினி
சந்தோஷமாய் மெள்ள நின்றுவாராள்.
தண்டைகொலுஸு பாதஸரம் பீலி காலாழி
தரித்தாள் நவரத்தினத்தால் பாதத்திலே;
இழைசேர்ந்த பட்டுடன் மேகலாபரணமும்
இடையில் ரத்னக்கச்சை புறத்தில் கட்டி;
இணையில்லா ரவிக்கையுடன் மார்பில் முத்து
[வடம்
இலங்கும் கைவளையுடன் சோபனம் சோப
[னம்.

36.

மாதளம் பட்டுப்போலே யுதடுங் கனிவாயும்
மதனன் வில்லைப்போலே புருவங்களும்;
காதுக் குண்டலத்துடன் மூக்கு நத்துஞ் சொலி
கருங்குழலாள் பின்னல்சுட்டி மின்னத் [க்க
தரித்துவருகின்ற மோகினியைக் கண்டு
தானவாள் சண்டையை நிறுத்திவிட்டு
ஆரிவள் என்று சுற்றிவந்த அஸுராள்
அமிர்தத்தை வெறுத்தார்கள் சோபனம் சோ
[பனம்

37.

அப்போது மோகினிசொல்வள் அஸுரர்களுட
ஐயன்மாரேகேளும் சண்டையானல், [னே,
இப்போதென்கையிலே தந்தாலமிர்தத்தை
எல்லாதேவருக்கும் கொடுத்துக்கொஞ்சம் -
கலசம் உங்கள்முன்னே தான்வரும் நிச்சயம்!
(நல்ல) காரியமென்றுங்கட்குத் தோன்றினல்
மலைக்காமல்தாருங்கள் அமிர்தக்கலசமென்று
மாய்கை மோஹிப்பித்தாள் சோபனம் சோப
[னம்.

38.

மூடஅஸுராளும் அமிர்தத்தைக்கொடுத்தேபின்
மோகித்தியாவரும் ஒருவரியாக இருந்தார்கள்!
உடனேதேவரும் ஒருவரியாக இருந்தார்கள்.
ஒகோ தேவர்க்கமிர்தம் பொழியுகிருள்!
சொர்னக்கரண்டியால் பரிமாறும்போது
சோபிக்கும் வளை பாதஸரங்குலுங்க
சொர்னம்போல் மோகினியைக்கண்டு அஸுராள்
சும்மாக இருந்தார்கள் சோபனம் சோபனம்.

39.

பொட்டென்னஅமிர்தம் அவ்வளவும் தேவர்க்குப்
பொழிந்துகொண்டு ஒடுக்கத்தில்வருகும்போது
ஒட்டஎடுக்கும்போது அகப்பையினுடைய
ஓசை குடத்திற்குள்ளே கேட்கின்றது!
மடையர் அஸுராளுக்கு அதுகூடத்தெரியவில்லை!
மாய்கையை அறிந்தான் ராகு, கேது!
நடுவில் ஒளிந்து சந்திரசூரியாளுடனே
ராகுவுங்குடித்தான், சோபனம் சோபனம்.

40.

சந்திராதித்தியன் முதல் தேவர்களுக்கெல்லாம்
சம்பிரமமாய் அமிர்தம்பொழிந்தாள்!
சந்திரபாஸ்கரன் சொல்லிக்கொடுக்கவே அகப்
[பையாற்
தலையைஅரிந்தாள் ராகுவை மோகினி
ராகுவின்தலை யிரண்டாயாகாசத்திற்போச்சு
(ராஜ)நாயகிகலசத்தை அஸுராள் முன்னே
[வைத்தாள்!
வைத்துவிட்டு மோகினி அந்தர்த்யானமானள்.
முழிக்கிருர் அஸுரர்கள்! சோபனம்சோபனம்.

41.

காணுதே மோகினிதேவியையும், வெறுங்
கலசத்தையுங் கண்டாரஸுராளெல்லாம்
துணித்துவிடுவோமென்று அமராளுடனே
தொடுத்தார்கள் யுத்தத்தைப்பின்னுமவர்தா
சுதையுடபலத்தாலே தேவர்கள் அஸுராளை [னே!
துரத்தினர் அடித்துப்பாதாளத்திலே!
ஸ்துதித்துக்கொண்டு விஷ்ணுவை ஸ்வர்க்கலோ
[கத்தில்
ஸுகமாக இருந்தார்கள்! சோபனம்சோபனம்,

42.

இந்த விருத்தாந்தத்தை நாரதரோடிப்போய்
ஈசரிடத்திற்சொல்லி அறிக்கையிட்டார்.
அந்தக்ஷணம் சிவன் க்ஷீராப்திக்கரைதன்னில்
வந்து விஷ்ணுவுடன் வாக்குரைப்பார்:—
லோகமாயையால் ஒருருபமெடுத்தீராம்
ஒருதரம் எனக்கதைக் காட்டுமென்ருர்.
ஆகட்டுமென்று விஷ்ணுவுஞ்சிவனைவிட்டு
அந்தர்த்தியானஞ்செய்தார், சோபனம் சோ
[பனம்.

43.

உமையுடபதியங்கே சுற்றிப்பார்க்கும்போது
உத்தியானவனங்கண்டார் அவ்விடத்தே
அதிரூபம்மான மோகம்மாம் பெண்கொடி
அழகாகப்பந்தாடிக்கொண்டிருந்தாள்!
கண்டவுடன் சிவன் உமையைவிட்டோடிப்போய்
கட்டிப்பிடித்து ஆலிங்கனமும் செய்தார்.
உண்டானர் அரிஹரபுத்திரர் உடனே
உயர்விந்து மர்த்தனர் சோபனம் சோபனம்.

44.

மோகினியும் அந்தர்த்யான மடைந்தாள்
மோகந்தெளிந்து சிவனுமையோடே
வாகனமான ரிஷபத்திலேறியே
வந்துகைலாஸத்தில் வஸித்திருந்தார்.
முன்னே பிரும்மாவை ஸ்ரீ ரக்ஷிக்கவந்தாளே
முதலாவது அந்த அவதாரம்;
பின்னே இப்பொழுதுசொன்னேமே மோகினி
[ரூபம்
பின்னுங்கேள் இதுவிரண்டு, சோபனம் சோப
[னம்.

45.

லலிதாதேவியுடைய மகிமைதன்னிலே
லக்ஷங்கோடியுள்ளதில் லேசம் சொல்வோம்.
கேளும் பக்தியுடன் கேட்டவர்க்கு மங்களம்
கிட்டும் நிச்சயம் சந்தேகமில்லை;
பூர்வத்தில் தக்ஷகனுடைய கன்னிகையாக்கும்
பூர்வாவதாரம் பரமேஸ்வரிக்கு
சார்வர்சொற்கோளாமல் தகப்பனர் யஜ்ஞத்துக்
[குத்
தாக்ஷாயனிபோனள்! சோபனம் சோபனம்.

46.

தகப்பனுந்தாயும் அம்மாவந்தையாவென்று
சொல்லவில்லை, தேவி பொறுத்திருந்தாள்!
முப்புரமெரித்தவருடைய பாகத்தையும்
மூடக்கிவிட்டெக்ஞத்தைச் செய்தான் தக்ஷன்!
ஈசர்பாகத்தை மூடக்கினதால் தேவி
இவன் பெண் என்பதைமாற்றவேணுமென்று
விசையாய் அக்னியிலே மறைந்து பார்வதியாக
வேறேயவதரித்தாள், சோபனம் சோபனம்.

47.

இதைக்கேட்டு ஈசனும் தக்ஷன் தலையைக்கிள்ளி
எறிந்துவிட்டெஜ்ஞம் நிறைவேற்றிவிட்டு
வந்து இமயகிரிதடத்தில் கங்கைமுன்னே
வடமூலத்தே யோக தபசிருந்தார்!
பர்வதராஜரும் நாரதர் சொல்லாலே
பார்வதி ருத்ராணி என்றறிந்து
பார்வதிதேவியை தகப்பனர் ஈசர்க்குப்
பரிசாரகஞ் செய்வித்தார், சோபனம் சோபனம்.

48.

ஸ்வாமி இப்படியாகத் தவஞ்செய்யும்போது
தாருகாஸுரன் சூரன் உண்டானன்.
ஸ்வாமியுடைய பிள்ளையல்லாமல் ஒருவரால்
சாவில்லை இவர்கட்கு வரத்தினலே!
தாருகாஸுரனடிபொறுக்காமல் தேவர்கள்
ஸ்வாமிமுன் மன்மதனை ஏவினர்கள்!
"வாராய் மன்மதனே தேவியோடீசனை
வாழும்படிக்குச்செய்வாய்!" சோபனம் சோப[னம்.

49.

தேவாள்சொன்னபடி மன்மதன் பாணத்தால்
தேவதேவரைத் தொடுத்தடித்தான்!
தேவர்கோபத்தினல் பார்த்துமன்மதனைத்
தகித்துச்சாம்பலாக்கினர் மூன்றாங்கண்ணல்!
பயந்து பார்வதியம்மன் அதைக்கண்டு ஓடிப்போய்
பர்வதராஜன் சொல்லால் தபஸிருந்தாள்.
மன்மதன் சாம்பலைப்பிசைந்து விச்வகர்மா
மனிதஉருவஞ்செய்தான், சோபனம் சோப[னம்.

---

பண்டாஸுரன் உற்பத்தியாகுதல்.

50.

சாம்பமூர்த்தியருமப்போ அமிர்தகடாக்ஷத்தால்
சாம்பல்பொம்மையைப் பார்த்தார், பார்த்த[வுடன்
சாம்பசிவனுடைய அமிர்தசடாக்ஷத்தால்
சாம்பல்புருஷன் சீவனெடெழுந்தான்.
விச்வகர்மாஅந்தக் குழந்தையைக்கொண்டுபோய்
ஈசனைப்பூஜிக்கச் சொன்னர் நன்றாய்!
விச்வகர்மா சொல்லால் அந்தக்குழந்தையும்
ஈசனைப்பூஜித்தான்! சோபனம் சோபனம்.

51.

அறுபதினயிரம்வருஷம் ஸாம்ராஜ்யமும்
அவனுக்குக்கொடுத்தார் பரமேஸ்வரர்
மற்றுமொருவர்கள் அவனைஜயிக்காமல்
வரத்தையுங்கொடுத்து அனுப்பிவைத்தார்!
அரன்கோபஅக்னியில் உண்டானதாலிவன்
அஸுரன் ஆகினன்; இதைக்கண்டுபிர்மா
"அஸுரருக்குச்சத்ருவானன், பண்டுபோல்" என்[றார்.
சொன்னதால் பேர் பண்டன், சோபனம் சோ[பனம்.

52.

பண்டாஸுரன் இப்படி யுண்டானவுடன்
பாதாளத்தில் போனஅஸுரர்கள்கேட்டு
கண்டகஅஸுரர்கள் பண்டாஸுரனைச்சேர்ந்து
கற்பித்தார்கள் பட்டணம்உண்டாக்கவே
மயனைவருத்திப் பண்டாஸுரன்உடனே
மாஹேந்திரபுரிக்குத் தெற்குப்பக்கத்தில்
செய்யச்சொன்னன் சோணிதாபுரத்தை! மயனும்
செய்தானதைநன்றாய்ச், சோபனம்சோபனம்.

---

பண்டாஸுரன் அரசாகுதல்.

53.

சுக்கிரபகவான் கொண்டுவந்துகொடுத்தார்
கிரீடமுஞ்சிம்ஹாஸனமும் வெண்சாமரங்குடை[யும்
சுக்கிரன்போல்யோஜனை யுள்ளதம்பியொரு
விசுக்ரனை வலது தோளில்சிருஷ்டித்தான்
இடதுதோளில்தம்பி விஷங்கனைசிருஷ்டித்தார்.
இன்னமொருத்திதங்கை திமினிஎன்பாள்—
வடிவுள்ளநான்கு பெண்டாட்டியுண்டவனுக்கு
வாதாபிமர்த்தனு † சோபனம் சோபனம்.

54.

அஷ்டமந்திரிமார்கள் மந்திராலோசனைசொல்லி
அவனைக்கொண்டு ராஜ்யம்நடத்துகிறார்.
துஷ்டஅஸுரரின் துர்ப்புத்திகேட்காமல்
சுக்கிராசாரி நித்யம் புத்திசொல்வர்:
அதிதிபூஜைஹோமம் சிவபூஜைநேமங்கள்
அஸுரரும் செய்கின்றார் சுக்கிரன்சொல்[லால்!
மதியுந் தர்மமாச்சு பண்டாஸுரனுக்கு
வாழ்வு வந்தபொழுது, சோபனம் சோபனம்.

55.

கேடுவந்தபொழுது பண்டாஸுரனுக்கு
கெட்ட புத்திவந்து தேவர்களைப்
பிடிக்கத் துவக்கினன்! வாஸவன் முதலாய்ப்
பிடித்துகொண்டுவந்து தன் கோட்டையினில்
காவல் காக்கச் சொல்லிச் சேவகராகவே
கட்டளையிட்டான் தேவர்களை.
துஷ்டன்கையிலகப்பட்டுக்கொண்டு விழிக்கிறார்[கள்
வில்லை அந்தகனே கேள், சோபனம் சோப[னம்.

---

† அகஸ்தியர் வாதாபியென்னும் அஸுரனை "வாதாபிஜீர்ணேபவ!" என்று தம்முள் ஜீரணிக்கச் செய்து கொன்றதால் அவருக்கு இந்தப்பேர் வந்தது.

56.

தங்கட்கு வினையை தேவாள் வருத்திக்கொண்
தாருகாஸுரனை வதைக்கவென்றே [டார்
சங்கரிடத்திலே மன்மதனை ஏவப்போய்
தானே வலையில் விழும் புலியைப்போலே
ஸ்வாமி தபவிற்கு துரோகம் நினைத்ததால்
சத்துருவாகினன் பண்டாஸுரன்!
வம்பன் பண்டாஸுரனை வதைப்பதற்கு
மனதில் நிச்சயித்தார் தேவர்கள், சோபனம்
[சோபனம்.

57.

நிர்ச்சுலர்படுகிற சங்கடமறிந்து
சத்துருஸம்ஹார மகாவிஷ்ணுவும்
அச்சுதரும் மாயா சக்தியை வருத்தி
அஸுரர்கள் மோகிக்கும் ரூபமதாய்
சொல்வர் மகாவிஷ்ணு: "தோழிமாயை நீ சே
துஷ்டன் பண்டாஸுரன் தர்மங்களை [ளாய்
ஒன்றையும் செய்யாமலே மோஹிப்பித்து
உபத்திரவி போ" வென்றார், சோபனம் சோ
[பனம்.

58.

உத்தரவாலே மாயையுந் தனக்கு
ஒப்பான எட்டுத் தோழிமாருடனே
உத்தியான வனத்திலே பண்டாஸுரன் நித்தியம்
உதயத்தில் குளிக்கும் குளக்கரையில்
பச்சைக் கல்லிழைத்த சுளித்தட்டின் மேலே
பாடுகிறாள் மாயை வீணையுடன்
பிச்சிச்செடி மேலே குயில் கூவினாற் போலே
பெண்கொடி பாடுறாள், சோபனம் சோபனம்.

59.

நித்தியம் வருவதுபோல் மந்திரிமாருடனே
நீராடவந்தான் பண்டாஸுரன்!
சித்திராங்கியான மாய்கையைக் கண்டான்
தேன்மொழியாளுடை பாட்டுங் கேட்டான்
மாய்கையை அடைந்தான் பண்டாஸுரனும்
மந்திரிமார் எட்டுப் பெண்களைச் சேர்ந்தார்
மாய்கையுடன் அவன் மஞ்சத்தில் இருந்தான்
வாழ்வு தேவர்க் காச்சு! சோபனம் சோபனம்.

60.

மாய்கையாகிய மடுவில் விழுந்தான்
மறந்தான் பண்டாஸுரன் சிவபூஜையை
வருஷங்கள் அறுபதினாயிரமும் பண்டை
வாழுங் கழிந்தது நிமிஷம் போலே
குடிலாக்ஷகன் முதலான மந்திரிமார்களும்
கூடினார் இவன்போலே மாய்கைகளை
அடித்துப்பறித்தாலும் ஆரோடிப்போனாலும்
அவனுக்குத் தெரியாது, சோபனம் சோபனம்.

61.

அந்த ஸமயத்தில் நாரதரோடிப்போய்
அமரனுக்கு நல்ல புத்தி சொல்வர்
(அஸுரன்) மந்தபுத்திகண்டு இந்தவேளை தன்
மகா தேவியை ஆராதனை செய்யுங்கள் [னில்
தேவி வந்தால் உங்கள் சங்கடங்கள் தீரும்
செய்யுங்கள் தபஸைத் தாமஸியாமல்
இவ்வளவு தேவர்க்கு புத்தி சொல்லிவிட்டு ஏகி
[னார் நாரதர் சோபனம் சோபனம்.

——()——

## தேவர்கள் அம்பிகையை ஜபத்தால் தியானித்து ஹோமஞ் செய்தல்

62.

தேவமுனிசொல்ல இந்திரனுடன் கூடச்
செய்கின்றார் தேவர்கள் உக்கிர தபஸை
ஈஸ்வரியை நோக்கி வருஷம் பதினாயிரம்
இப்படி தேவர்கள் தபஞ்செய்கிறார்கள்!
ஆகார நித்திரை விட்டெல்லா தேவாளும்
அதிகடினமான தபஸிருந்தார்.
பகவதி ஈஸ்வரியாள் இதுவரைக்கும்
ப்ரத்தியக்ஷ மாகவில்லை, சோபனம் சோபனம்.

63.

அஸுர குருவுந் தேவர் தபஸைக் கண்டு
அவருடைய முதல் கொள்ளை போனதுபோல்
விசையாய் வந்து பண்டாஸுரன் கிட்டச்சொல்லி
விக்னங்கள்செய்யச் சொன்னான் தேவர்கட்கு!
சேதியைக் கேட்டவன் மாய்கையை விட்டு
சிம்மாஸனத்தில் வந்து யோஜித்தான்:
வதஞ்செய்கிறோமென்று சேனையுடனே வந்தான்
வானவர் தங்களிடம், சோபனம் சோபனம்.

64.

வந்திங்கே பார்க்கும்பொழுது தேவரைச் சுற்றி
மாய்கையாலே ஒரு கோட்டை கண்டான்
தந்திரஞ்செய்தாலும் கோட்டையைப் பேர்த்திடச்
சரிப்படாமலேயவன் ஓடிப்போனான்! (ஊரில்)
கோட்டையைக் கண்டு பயந்திங்கே தேவாள்
கொடூரன் பண்டாஸுரன் போட்டதென்றே
சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தம்மனை
சரணமானார் தேவர்கள், சோபனம் சோபனம்.

65.

மின்னுமந்தத் தேவர்கள் எல்லாருமாய்க் கூடி
புத்தியால் ஒன்று நிச்சயித்தார்கள்:
ஒன்று செய்வோந் தேவி ஜகத்திலே உண்டானால்
ஓடிவந்து நம்மை இரக்ஷிக்கட்டும்!
இல்லையாகில் தேவாள் அவரவர் தேகத்தை
யினுக்கினுக்காய்ச் சேதித்து ஓமஞ்செய்வோம்!
நல்லக்கினி குண்டத்தில் உடம்புகளைத் தேவாள்
நறுக்கி ஓமஞ்செய்தார், சோபனம் சோபனம்.

——(.*.)——

## லலிதாம்பிகையின் அவதாரம்.

66,

கால்மூதல் தோள்வரைஓமஞ்செய்து தேவாள்
கழுத்துடன் குதிக்க நிச்சியித்தார்கள்!
மின்னல்மலைபோலே அக்கினி குண்டத்தில்
மின்னிக்கொண்டொரு காந்தி யுண்டாயிற்று!
ஆச்சர்யத்துடன் தேவாள் தேஜஸைக் கண்டார்கள்
அதற்குள்ளே ஸ்ரீசக்ராதத்தைக் கண்டார்
அழகான ஸ்ரீசக்ர ரதத்தின்மேல் லலிதா
அம்மனவதரித்தாள், சோபனம் சோபனம்.

67.

பத்மராகத்தினுல் இருபாதங்களிலும்
பாதஸரம் பீலி கொலுஸுகளும்
ஹம்ஸம் போலே யம்மன் நடையழகும்நல்ல
யானைத் துதிக்கைபோல் தொடையழகும்
செவந்த பீதாம்பரம் உடுத்த பின் தட்டும்
சிறுத்த இடையில் ரத்ன மேகலையும்
நவநீதம் போன்ற தொப்புள் சின்ன உதரத்தில்
அழகாய் மூம்மடிப்புடன், சோபனம்சோபனம்.

68.

தாமரை மொட்டுப்போல் தளதளென்று இரு
ஸ்தனங்களும் சரப்பளி முத்து ஸரம்
சமுகிளி சங்குபோல் கழுத்தும் ஜெவ்வந்திவகை
கட்டிய மாலைகளும், நான்குகையும்,
நவரத்தினமிழைத்திட்ட வளையுங் கொலுஸு
நாலு கையில் கணையாழி மின்ன [டன்
நவக்கயிறும் கரும்பும் தாட்டியும் புஷ்பமும்
நான்கு கையிலுமுண்டு, சோபனம் சோபனம்

69.

பவழம்போல் உதடும் குருக்கத்தி மொட்டுப்போல்
பல்லுக்களின் ஒளி காந்தியலும்
கருநீலப் புஷ்பம்போல் விழியும் தாழம்பூப்போல்
காதுகளும், வில்லதுபோலவே புருவங்களும்
அழகாச் செண்பக மொட்டுப்போல் மூக்கும் நத்
[தும்
புலாக்கும், கண்ணாடிபோலே கன்னங்களும்
இருகாதில் ஓலை குண்டலம் வாளிமுதலாய்
இலங்குஞ் சந்திரமுருகும், சோபனம் சோப
[னம்.

70.

அர்த்த சந்திரஹார நெற்றியில் சிந்தூரம்
அதிசிகப்பாய் மூனுங்கண்ணதுபோல்
அர்த்தசந்திரகலையும் சுட்டிராக்கோடியும்
அதி நீலமான கேசத்தின் மேலே
சிந்தாமணி ரத்னத்தாலே கிரீடம் விரலிலே
தரித்துக் கொண்டிருக்கிரு ளம்மன்பாரே!
சந்தனங் கஸ்தூரி புனுகு பூமாலையும்
தரித்து மாதாவந்தாள், சோபனம் சோபனம்.

71.

மண்டலம் பாலர்க்கன் போலம்மன் வர்ணமும்
வளமுள்ள சந்திரகாந்தி சீதளமும்
கண்டவுடன் தேவியை கைகூப்பிதேவர்கள்
கனகத்தடிபோல் விழுந்து பணிந்தார்கள்!
தேவர்களுடைய தேகாணத்தைக் கண்டு
ஸ்ரீலலிதைமெத்த இரக்கத்துடன்
அவ்வளவு பேரையுமமிர்தக்கண்ணுல் பார்த்து
அங்கக்குறைகள்தீர்த்தாள், சோபனம் சோப
[னம்.

72.

த்ரிடமான தேகத்தை அடைந்தார்கள் தேவர்கள்
ஸ்ரீதேவியுடைய கிருபை அனுக்கிரகத்தால்
அடிக்கடி நமஸ்கரித்து விட்டுக் கீர்வாணர்
அஞ்சலி பண்ணிஸ்துதி செய்கிருர்கள்!
ஓம்நமோ நாராயணியே பகவதி
உம்மைத்துதி செய்கின்ருேம் அதிதிபுத்திராள்
இன்றுபோல் எங்களுடைய ஆபத்தெல்லாந் தீர்
[த்து
என்றும் எங்களை ரக்ஷி! சோபனம் சோபனம்.

73.

மூன்றுலகங்களையும் நான்கு வேதங்களையும்
முழுதும் எல்லாம் பெற்ற மாதாநீரே
வானுலகமும் ஸர்வ ராஜ்யாதிகாரிகட்கும்
வாமும் சாம்பிராஜ்யமும் கொடுப்பது நீர்
ஏழுவகைத் தோற்றத்தின் எண்பத்து நான்குக்
இரக்ஷிக்கும் தாயாரும் நீரேயம்மா! [கும்
சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தோம் உம்மிட
சரணம்புஜங்களில், சோபனம் சோபனம்.

74.

அதலவிதல ரஸாதல சுவர்க்கங்களிலும்
அம்பிகையின் தேகஒளிகள் வீச
சுதையும் ஸுதாவுடன் அளகேசன் அக்னி
ஸுரர் கருடர் கின்னரர் சித்தர்களும்
ஹரிபிர்ம ஈசருடன் எல்லாம் உன்னுடைரூபம்
ஆராலே ஸ்தோத்திரம் செய்துமுற்றும்
லேசம்சொன்னேம் மகிமை லெக்ஷங்கோடியுள்ள
[தில்
லலிதைக்கு நமஸ்காரம் சோபனம் சோபனம்

——()——

லலிதாம்பாள் தேவர்களுக்கு அபயமளித்தல்.

75.

ஸ்துதியாலே மெத்தமனங் குளிர்ந் தீஸ்வரி
சொல்லுவள் திரும்பவும்சீர்வாணர்க்கு
இன்றுமுதல் பயத்தைத் தூரவிட்டு விடுங்கள்
இந்தப் பண்டாஸுரன் நமக்குப் பஞ்சு!
அரைநிமிஷத்தில் பண்டாஸுரப் புழுவை
அக்னி எரித்தாற்போல் வதைத்திடுவோம்
ஒரு வாக்கிற்குமறுசொல் லில்லை நமக்கு!
உங்களுக்கே மங்களம், சோபன சோபனம்.

---

லலிதாம்பாள் கலியாணம்.

76.

அம்மனும் அவதார மானத்தையறிந்து
அப்போது பிரும்மா விஷ்ணுருத்ரான் வந்தார்
மும்மூர்த்திகளுடன் முனிவர்கள் கந்தர்வர் [கள்.
கின்னரர் கிம்புருடர் அப்ஸரஸும்;
வைரவர் க்ஷேத்ரபாலர் கந்தன் கணபதி
எட்டுத்திக்குப்பாலரும் சக்திகளும்
வாராகி சாமுண்டி மாதங்கி முதலேழு
மாதாக்களும்வந்தார்கள், சோபனம்சோபனம்

77.

சகலரும் வந்து லலிதாதேவியுடைய
சன்னதி நிரம்பி இருந்தார்கள்.
மஹா தேவியை நமஸ்காரஞ்செய்து விட்டு
வாழ்த்தி ஸ்துதித்துக்கொண்டு மிருந்தார்கள்.
நான்முகர் ஆக்ஞையால் தேவிக்கு மண்டபம்
நல்லசிற்பி விஸ்வ கர்மாவினாலே
ராஜேஸ்வரிக்கு இசைந்தாப்போலே கிரகம்
நிர்மாணஞ் செய்துவைத்தார், சோபனம்சோப
[னம்.

78.

அம்மன் கிருபையாலே விஸ்வகர்மாவும்
அழகான புரங்களும் சபைகளுங் கூட
சிந்தாமணி ரத்னம் பளபளென மின்ன
சிம்ஹாஸனம் உண்டுபண்ணி வைத்தானே
பட்டண அமைப்பையும் அம்மன் தன் அழகை
பார்த்துப் பிரமதேவர் யோஜிக்கின்றார்: [யும்
"நாட்டுக்கதிபதியான அம்மனுக்கு
நாயகர் வேண்டுமே!" சோபனம் சோபனம்.

79.

தேவிக்குக் கணவனார் ஈசர் அல்லாமல்,
ஜகத்திலேவேறே ஒருவரில்லை
அவருக்கோ ஆனால் சுடலையில் இருப்பு
எலும்பும் அரவமும் ஆபரணம்
சாம்பலும்பூசி சடையுந்தரித்து
தலைமண்டை யோட்டையும் கையில்கொண்டு
அம்பலத்தாடினார் இவருக்குக் கணவராய்
ஆகுவதெப்படிச், சோபனம் சோபனம்.

80.

இப்படிப் பிர்மா மனதிலெண்ணினதை
ஈசர் அறிந்து நல் ஒளியுடனே
முப்பதுகோடி மன்மதாகார ரூபமாய்
வேஷந்தரித்த திஸுந்தரமாய்
மகுட குண்டலமோடு அழகு பீதாம்பரமும்
மார்பில் சந்தனமும் முத்துமாலையுடன்
மோகனவேஷம் தரித்திந்தப்படி தேவி
முன்னே நின்றாரீசன், சோபனம் சோபனம்.

81.

நின்ற நிலையில் அதிஸுந்தரமான
லலிதாதேவிக்கு இசைந்த அழகும்
என்றும் பதினாறு வயதுந் தரித்துக்கொண்
டிருக்கின்ற ஈசரைக்கண்டு பிரும்மா
காமேஸ்வரரென்று பேருமிட்டவருக்கும்
கண்ணாட்டி லலிதேஸ்வரி தேவிக்கும்
ஆமென்றிவர்கள் இரண்டு பேருக்கும்
கல்யாணஞ் செய்யலாமென்றார்! சோபனம்
[சோபனம்.

82.

கமலாசனருடைய ஆக்கினையால் விஸ்வ
கர்மாவும் மயனும் இருபேருமாக
கமனீயமாய் ஸ்வர்ண ரத்னங்களாலே
கல்யாண மண்டபம் உண்டாக்கினார்கள்.
வாழை கமுகு கரும்பு பூச்சரக்களும்

வாடாத மாலைகளும் நிறைத்தார்கள்
கொழுந்து பிச்சி மருக் கொடமல்லி இருவாக்ஷி
கோலஹலம் செய்தார்கள், சோபனம் சோப
[னம்.

83.

சோடித்துக் கல்யாணத்துக்கெல்லாம் பிர்ம்மாவு
கோவிந்தரோடே சம்மதத்தாலே [ம்
ஒடுக்க வணக்கமாய் அம்மனைப்பார்த்து
உம்மைக் கணவருடன் பார்ப்போமென்றார்!
மாதாவும் தன்னுடை கழுத்திலிருந்தொரு
மாலையைக் கழட்டி அம்பலத்தில் போட்டாள்!
நாதர் காமேஸ்வரர் கழுத்திலந்தமாலை
ராஜியாய்ச் சேர்ந்தது, சோபனம் சோபனம்.

84.

கீர்வாணர் வாத்தியம் பதினெட்டு முழங்கினார்
கீர்வாணர் புஷ்ப வருஷஞ் சொரிந்தார்கள்.
ஊர்வசி முதலாக நிருத்தனஞ் செய்தாள்
உடனே கல்யாண வேஷம் தரித்தாள்
ஈசரும் தேவியும் மாலையிட்டார்கள்
இருவரும் இருந்துபின் தன்னூஞ்சல் ஆட
வாஸுதேவராலே உமையவளைத்தாரை
வார்க்க சொன்னார் பிர்மாவும், சோபனம் சோ
[பனம்.

85.

பத்மாஸனர் சொல்லால் நல்ல முகூர்த்தத்தில்
பரிமளிக்கும் தேவசபைநடுவே
பத்தியுடன் கூட விஷ்ணு காமேச்வாருக்கு
பக்தியாய் மதுவர்க்கந்தான் கொடுத்தார்
காமேச்வாருக்கு லலிதேஸ்வரியை
கன்னிகாதானம் செய்தார் மஹாவிஷ்ணுவும்
காமேஸ்வாரும் திருமங்கல்யதாரணம்
கட்டினார் லலிதைக்கு சோபனம் சோபனம்.

86.

செய்யால் ஹோமஞ்செய்து பாணிக்ரகணஞ்செ
நீலகண்டர் அம்மனை அம்மிஏற்றினார் [ய்து
மெய்யாக அக்னியை மூன்றுதரஞ்சுற்றி
முக்கண்ணர் பொரியினால் ஹோமஞ்செய்தார்.
காமேஸ்வாரும் லலிதேஸ்வரியைத்தான்
கல்யாணஞ்செய்திருந்தார் ஸுகமாக!
பூமிமுதல் மூன்று லோகத்தவர்களும்
புகழ்ந்தார்கள் அகஸ்தியரே! சோபனம் சோப
[னம்.

87.

காமேஸ்வாருக்குங் காமேஸ்வரிக்கும்
கரும்பு வில்லுக்களைக்கொடுத்தார் பிர்மா!
பூமீசர் விஷ்ணுகொடுத்தாருடனே
புஷ்பபாணங்களை இருபேருக்கும்!
வருணன் கொடுத்தான் பாசம் விஸ்வகர்மா
வாழ்த்திக்கொடுத்தான் இரண்டு தாட்டிகளை
உரங்காய்ல்கேளக்னி வாயுவுங்கொடுத்தான்
ஒளியான அஸ்திரத்தை சோபனம் சோபனம்.

88.

அவரவராலேயான அஸ்திரங்களை
அம்பிகை முன்வைத்தார் அமரர்களெல்லாம்
கல்யாணம் ஆனபின் ஸாம்ராஜ்யஅபிஷேகம்
காமேஸ்வாருக்கும் காமேஸ்வரிக்கும்
பட்டாபிஷேகத்தைச் செய்தார்கள் தேவர்களெல்
பரிபாலனஞ்செய்து இரக்ஷிக்கவே [லாம்
பட்டணப்ரவேசத்துக்கு புஷ்பவிமானத்தை
பத்மாஸனர் செய்தார், சோபனம் சோபனம்.

89.

பதினெட்டு வாத்தியம் மத்தளம் தாளம்
பாட்டுப் புல்லாங்குழல் சேவிக்கையும்
மதயானை குதிரையும் கொடியாலவட்டமும்
வரிசையாக முனிவரும் ஸ்தோத்திரிக்க
சோடித்து அம்மனையும் காமேஸ்வாரையும்
கோஷித்து விமானத்திலேத்திவைத்து
கோஷமாத்தெருவீதி வரும்போது ஹாரத்தி
கோதையர்செய்தார்கள், சோபனம் சோபனம்.

---

(இன்னும் வரும்.)

ஆர். எஸ். சுப்பலக்ஷ்மி அம்மாள்.